நடந்தாரந்தொண்டர்பத நளினம்புளகம்பெறப்போற்றி
வடந்தாழ்முலையாரொனுங்கொழும்பால்வாரிமுழுங்குமவ்வூரே. (கூ௫)

ஊருட்புகுந்துவீதிதொறுமுள்ளங்குளிரவொளிவளரப்
பாருட்பணிந்துதிணிந்தமதிற்பயில்கோபுரவாயிலும்பணிந்து
வேருட்பழுத்தமலர்க்கனியைவிண்ணுட்டமுதைத்தண்ணளிகூர்
வாருற்றுண்ணுமுலையாளை மலைசூழ்போந்துவணங்கினரால், (கூ௬)

தாழாக்கருணை விடைகொடுபோய்த்தருக்கிப்பெருக்காற்றெழுதென
வாழாநின்றதிருவிசைப்பாவள்ளலுள்ளங்கரைந்துருகிப்
பாழாய்ப்பயிலாத்தொழிலாற்றும்பரனலயங்கள்பலபோற்றிச்
சூழாவருவாரிடைமருதிற்றேன்றுங்குருவையொருவாதார் (கூ௭)

மற்றும்பதிகளாங்காங்குவணங்கிக்குணங்கொணீறணிந்த
சுற்றுஞ்சடையார்க்கினியதமிழ்த்தொடைமாலைகளும்பலசாத்தி
யெற்றும்புனலும்பெரியோருமினம்பூவையரும்வனம்பூத்துக்
கொற்றந்தரும்வேதாகமமுங்குழுமுங்காஞ்சிநகர்புகுவார். (கூ௮)

வேறு.

மாயவளப்பொருடேடமாநீரிற்போய்வருவார்
நேயவளப்பொருடேடநீணிலத்தின்மேற்படர்வார்
தூயவளப்பெரியோர்வாழ்தொண்டைமண்டலத்துத்
தாயவளைப்போதுமுறைதண்காஞ்சித்தலத்தணைந்தார். (கூ௯)

கச்சியாந்தலநலத்தைக் கண்டிரண்டுகைகூப்பி
யுச்சிவாளிளம்பிறைக்கையொத்துவளருத்தமனார்
நச்சியாரணம்பாடி நாடியநற்றவங்காட்டும்
பச்சைநாயகிசிவந்த பாதநினைந்துட்புகுவார். (௧00)

மெய்காட்டியாண்டருளும் வித்தகர்மாவடித்தேவர்
கைகாட்டுந்தொண்டரொலாங் காவிரிப்பூம்பட்டினத்தா
ளைகாட்டும்பெரியோர்வந் தடைகின்றா ரென்றடைந்தார்
மொய்காட்டிமிவாவர்கண் முன்பணிந்தாரன்பாளர், (௧0௧)

மாடநெடும்பொன்வீதிவண்ணமெலாங்கண்ணுவப்ப
நீடியநீரார்பணிந்து நீர்மழைகண்ணூற்பொழிந்து
கோடலுறுவாக்காற்குளம்பாய்கொழுந்தமிழ்கள்
பாடினார்நாடிப்பரநாதன்முன்பணிந்தார். (௧0௨)

ஒன்றாகநின்றுருகி யோங்காரநீங்காம
னின்றானையென்றபினின் கோலமாயிருப்பக்
குன்றாவரமளிப்பாயென்றூர்குறைவறியார்
வென்றாளுமம்பிகைவாழ்மெய்க்கோயில் புக்கனரால் (௧0௩)

வேறு.

ஆருயிராமவையார்பெறவீடற
வாரநிலாவியமாதவன்மாதவள்

சிறுறைவான்விழிசிறுறைவாளரு
ளேறுறவேறுறவேயிவர்நின்றார். (௧௦௪)

செங்கழுநீர்மலர்மூன்றொருநீப
மங்கலர்நான்கொருநான்கெரிநீப
மெண்களுமைக்கெண்லரமிலையாவுஞ்
சங்கரனன்பர்தருக்கொடுகண்டார். (௧௦௫)

தாயவணின்றுதவம்புரி காலைக்
கோயில்குலாநதிகொண்டமைகண்டார்
ாயகன்மேனிநலஞ்செய்தழும்பை
யேயவர்நாத்தழும்பேறமொழிந்தார். (௧௦௬)

கச்சிநகர்க்கடலக்கடற்றோன்றும்
பச்சமுதப்பனையைப்பண்ணிவுற்றார்
மைச்செறிகட்கடைவைத்தருளவைத்தா
லிச்சிறுமைக்கடல்வற்றிடுமென்றார். (௧௦௭)

என்றுவலாங்கிவலங்கொடிணங்கிக்
குன்றிலவிளைந்தகொழுங்கனியுட்கொளன்
டென்றுமிருங்களியின்பநிரம்ப
மன்றினடநதொழுவநதவர்வந்தார். (௧௦௮)

வேறு.

திருவேகம்பமுடையார்க்குத் திகழ்ந்தந்தாதியொருமாலை, யிருபான்
மெய்த தொண்டனவெடுத்தாலயற் றொண்டரீயோன் கைத்தொண்டு,
புரிவாரதனிற்காற்றொண்டுபுரியே னுன்பான்பொய்த்தொண்டாய், வரு
வேனென்றார்மெய்நாட்டோர் நகைக்கவெழுமாலையுமிசைத்தார். (௧௦௯)

இசைத்தங்கிருப்பாரோரிரவிலெரிவாநதுதரம்புகுநதாற்போ
லாசிக்கும்பசிவந்தெழவயிரோ யூருண்டுறங்கடைநதனகாலன்
வசிக்குமவர்களனமபகிராரளியாமென்றுவழுத்திடவும்
பசிக்குந்தரமேலிடவிளக்குப்படுவீடொன்றுற்படர்நதனரால். (௱௰)

காயும்பசியாலருட்பெரியோர்கங்குல்யாமத்தெளியராய்
வாயுந்திறவாரங்கைகொட்டயனைவாழ்பவன்சற்றறியாம
லாயுங்காமக்கள்ளனெனவந்தோவந்தோதீங்கிழைப்புத்
தியோன்செயலையறிந்தங்கணயலானொருவன்றெரிந்தணைந்தான். (௱௰௧)

போற்றும்பெரியோரிவர்தமைநீபுடைத்தல்பொல்லாதெனவதனை
மாற்றிக்கொடுபோயுடற்றடிவிமனில்பாலன்னங்கறிநறுநெய்
கோற்றேனிவைகள்கலநதூட்டிக்குளிர்சாந்தணிந்துபணிந்துசெயல்
சாற்றியிடநீரவரவர்க்குத்தக்கதடைந்திரொன்றூர்பின் (௱௰௨

பிரியாவரனை விடைகொடுபோய்ப்பெருங்காளத்திமலைநோக்கி
வரியார்சுரும்பர்வரியிசைக்குமலர்க்காவலங்காட்டம்மைக்
குரியார்வணங்கிமணங்கமழுமுயர்பூங்கானநெடுஞ்சாரம்
பெரியோர்தவங்கள்புரிவனவுங்காண்பான்கருதிப்பெயர்ந்தணைந்தார். ()

தொண்டர்திரளோடேடிப்பணிந்து தொழுதுவீதிச்சினகரத்தைக்
கண்டுவணங்கிக்கரங்கூப்பிக்கள்ளங்கொள்ளாவுள்ளத்தார்
மண்டும்பேரன்பெனவறியாவண்ணம்பயிலுங்கண்ணப்பர்
பண்டைப்பணியைநினைந்துருகிப்பல்காலெல்லாம் பணிந்தனரால். ()

பணிந்துதிருக்காளத்திமலைப்பரஞ்சோதியையும்பணிந்துபணி
கணிந்துபரஞ்சோதித்திருநின்றன்பென்புருகுமின்பாளர்
திணிந்தபடிவக்கொடுமுடிகடிசைகடோறுமிசையுமவை
துணிந்துகருணைத்திறம்பெறுவார்சூழப்போந்தார்வாழ்வுறவே. (௱௧௫)

யாதும்போதின்மணிநகரம்புடையிலாடவிசைநோக்கி
நாதர்க்கிடுதண்டைத்திபநவையர்வாகுங்கதிக்காளம்
கைகமில்லாவுறவேயோவென்பார்முன்பேரம்புலயானை
ததமதியோன்விழாவினுக்குத்திருமுன்படரப்போவென்பார். (௱௧௬)

நயன்றிருமேனியினடங்குமத்தியுறவோவெனநினைவா
ரெய்யுஞ்சிலைவேட்டுவர்திண்ணனர்க்கெண்ணுமுறவோபண்ணமைந்த
செய்யகனிவாய்க்குறமகளிர்சிவஞ்சேர்கன்னிமார்நேர்வார்
துய்யசீரர்தமிழிசையோர்சுரும்பின்பாடலாமென்பார். (௱௧௭)

தவமாற்றுமலாற்றுவர் தம்மைச்சிவகோசரியாரொன்
றுவமானத்தானினைந்துருகியொளிகூர்தென்றிசைக்கயிலைத்
தவமாமலையைச்சூழ்போந்துதொடர்ந்துபடர்ந்தத்தவத்தவரோ
டவமாறியலாக்கதியளிககுமையன்றிருமுன்னடைந்தனரால். (௱௧௮)

தளிர்கூரருவித்தென்கயிலைக்கோமாற்கில்லுமெனப்பாடி
யொளியார்திருமுன்விடைகொடுபோயொற்றியூர்கைப்பற்றினராய்த்
தளியாலயங்கள்பலபோற்றித்தண்டாமணக்காட்டொடுமாட
வெளிமாமலைகள்கலைஞானவேலைநிலவப்பதிபோந்தார். (௱௧௯)

அடியார்திரளவ்வயினேக்கியடிகளடித்தாமரைபோற்றி
படியாவிருளைவிடிவிக்கும்வீதிமதிற்கோபுரம்பணிந்து
பொடியாடியவொண்டிருமேனிப்புனிதனுதனைப்புகழ்பாடி
யடியார்க்குநாதாந்தஞானப்பொருளைநணுகினரால். (௧௨௰)

தருவாய்வந்தென்குறைதீர்த்தகுன்றேகுன்றக்கொழுமணியே
பெருவாழ்வாகியெனைக்கலந்துபிரியாதிருக்கும்பெருந்தேனே
யுருவாயருவாயுருவருவாயுமையாடியமூன்றையுமொருவி
மருவாய்தருவாயென்னுயிர்வாய்மருவாய்மருவாய்மருவாயே. (௧௨௧)

போற்றிபோற்றிநாயேனைப்பொருளாய்க்கொண்டவருள்போற்றி
யாற்றின்வலிகூர்முகங்கோடியடக்குஞ்சடையாயடிபோற்றி
தேற்றியினியாயினுமுனைப்போற்செய்வாய்மெய்வாயருள்போற்றி
நீற்றினுள்ளேபவளவொளிநிகழுந்திகழ்மேயருள்போற்றி. (கஉஉ)

என்றென்றருளின் றிறம்போற்றியெள்ளாவுள்ளங்கனிந்திளைப்ப
மன்றுளாடியெமக்கருளுமணிமாணிக்கப்பதம்பணிந்து
நின்றுபோந்துவலஞ்சூழ்ந்துநிகழ்ந்துமகிழ்ந்தங்கிருக்கின்றூர்
தென்றல்வந்துசுந்தராவைத்திருவாரூருக்கழைத்தலூர். (கஉ௩)

மயலைப்புலியற்றுதமணிச்சங்கிலிக்குத்தூதுபோய்
வியனுமிருகானடந்தார்க்குவிருந்தாய்வந்தவெண்காடர்
கயனுணியகட்கணிகையர்காற்கமலச்சிலம்பினொலிமலியும்
பயனுரொற்றியூர்பற்றிப்பதிகொண்டிருந்தார்படிபோற்ற (கஉ௪)

வேறு.

இருநிலமடந்தையென்னவெடுத்தவாசிரியச்செய்யு
ளொருபதுமொன்றுமொற்றியூர்த்தொகையெனப்பேரிட்ட
திருவிசைப்பாவாற்பாடித்தெளியொளிவுளம்விளங்கப்
பெருநிலையுடையாரின்பப் பேறெல்ராம்பெற்றுளாரோ (கஉ௫

பெற்றவர்திருநீராடித்திருநீற்றின்பெற்றிமுற்றுங்
கற்றவர்புரங்கண்மூன்றுங்கற்றவர்கருத்துட்கொண்டு
செற்றவரடிகள்பாடிதநினைந்தொறுநியமமாற்ற
லுற்றனருற்றவாற்றினுண்மையிங்கியம்பலுற்றேன். (ளஉசு

நம்மிடைமருதநாதனற்குருவாகிவந்து
தம்பொருடனக்குத்தந்ததண்ணளிப்பெருமையாலே
யம்பொனஞ்செழுத்தினாலுமருநியமங்கள்செய்வார்
சம்புவையொழியாப்பூசைத்தன்மையுமவற்றுற்செய்வார், (ளஉஎ,

கிளர்ந்தகெற்பத்தினுள்ளுங்கெற்பகோளகையிடத்துங்
கொளுங்கெற்பநிலையத்துள்ளுங்கேவலஞ்சகலங்கூா
வளர்ந்தறிசகலந்தாமேயதீதம்போன்றதீதமன்றும்
வளங்களுங்கண்டுநீங்கிமண்டொளிகொண்டுநிற்பார், (ளஉஅ

அவத்தைகடளர்ந்தவன்றியையனுக்காக்கையாக்கிச்
சிவத்தொழிலொவ்வெழுத்தாற்சிவலிங்கவடிவமாகிப்
பவப்பெரும்பிணிதணிப்பார்பரவுயிர்தமக்குளாக்கி
யவர்க்குளவுடலந்தாமேயாயினரொற்றியூரர். (ளஉ -

அவருயிர்தமக்கில்லாக்கியாண்டவாண்டகையார்நிற்ப
வுவரிவாய்மணற்பரப்பிலொளிவெளியிடத்திற்போந்து

கவலுற்ற சிறார்கள் சூழக்கண்டவர் தன்மையாகிப்
பவர்விளையாடலோடும்பாடலும்பயிலலுற்றார். (௱௩௰

குறுமகாரணிக்குழாங்கள்குளிர்மணப்புளினப்பாங்க
ருறுதிமெய்த்தளர்ந்துபின்னரொன்றும்வெண்காட்டர்தம்மை
மறுநரம்புதைத்துத்தொக்கவப்புறம்பார்த்துநிற்பார்
மறுகுழிப்படுத்தபின்னுமன்னவர்விலகிநிற்பார் (௧௩௧)

பன்முறையித்தன்மைத்தாம்படிப்படி மணலிற்காட்டி
முன்னரியபட்டினத்துமுனைத்தவவடிவந்தானே
சென்னெறியிலிங்கமாகிச்செழுமணறனின்முளைத்தார்
புன்னெறிச்சிறார்களோடிப்புரத்துளார்க்குரைத்தாரன்றே. (௧௩௨)

ஒற்றியூருறுநியுள்ளாருமற்றுளபுரியுளாரும்
பற்றியூர்ந்தடைந்துகண்டார்பட்டினக்கடவுளாரை
வெற்றியூர்மூன்றுஞ்செற்றவிமலரோயிவராமென்றார்
பெற்றியூரதிசயத்தின்பெருமையாருரைசெய்வாரே. (௧௩௩)

மலர்மழைபொழிந்தவெங்கும்வானதுந்துமிமுழங்க
நலமலிகணங்கள்சூழநாகநாட்டரம்பைமார்கள்
பலநடம்பயிலப்பூவிற்பாவையாரடியர்பாட
விலகியவிதழிமாலையீசனுக்கணிதாரன்றே. (௧௩௪)

புகுவார்வார்த்தைநாத்தகவாப்புவனத்துள்ளுமந்தரத்து
மகிழுந்தேவருலகுள்ளுமணிநீர்வேலிஞாலத்துந்
தகுவோர்கேளர்விவர்பேறுந்தமக்குவருமோவெனக்களித்தார்
நகையானிலப்புரமூன்றுமெரித்தார்பெருமைநவில்வார்யார். (௱௩௫)

திருவம்பலமேமுதலாயசிவத்தர்னங்கள்பணிந்தனவு
மருவும்பொழுதுதிருவிசைப்பாவமுத்துந்திறமுமொற்றியூ
ரருளின்றிறத்தாற்சிவலிங்கமானவாறும்பூம்புகார்
விரவுங்குலத்தாரறிந்தோகை வெள்ளத்தழுந்தாமி ந்தெழுந்தார். ()

அழுவார்தொழுவார்சென்னியின்மேலங்கைவைத்தஞ்சலி முகிழ்ப்பர்
வழுவாநமதுகுலத்தெய்வம்வருமோகாணவினியென்பார்
முழுவான்மதியங்கொழுந்தருளப்பெறுமோவென்னமொழிகின்றார்[ரோ.
பொழுதோடிவண்விட்டவ்விடம்போய்ப் பணிவோமென்பார்புண்ணிய

சொன்னவண்ணங்கிளைகளொடுந்துழனியார்ப்பவப்பதியோ
ரன்னபெரியோர்போனநெறியவனிதலமேற்பலர்படர்வா
ரின்னவாற்றலொற்றியூரிடத்திலடைந்தார்சிவபெருமான்
றன்னைப்பணிந்திச்சிவபெருமான்றனையும்பணிபாகிற்கின்றார் (௧௩௭

போற்றிபோற்றிநின்னிரண்டிபூமென்கமலபதம்போற்றி
தேற்றமருவும்பராதச்சிலம்புபோற்றிநலம்பயிலன்

பேற்றவரியப்புலியதளின்மருங்குல்போற்றிபெருங்கரவந்
தோற்றமுதரபந்தமுந்திச்சுழியும்போற்றியெழில்போற்றி. (௧௩௯)

புரிநூன்மார்பும்வெண்ணீறும்புயமீரைந்தும்புடைபோற்றி
வரியர்ரரவம்வச்சிரம்வாண்மழுவோடபயம்வலம்போற்றி
யரவார்பாசக்கயிறுமணியனலங்குசத்தோளிடம்போற்றி
கரவாதிருக்குந்திருநீலகண்டம்போற்றியொளிபோற்றி (௧௪௦)

நடுவுகுணபாற்றென்றிக்குகுடக்கும்வடக்குக்கிழக்கிவற்றி
னடைவுபடிகம்பொன்கருமையாத்தம்பாலாமுகம்போற்றி
முடிவிலாதமுகங்கடொறுமுக்கட்கமலபதம்போற்றி
சடையுமுடியுமபொன்[illegible]த்தாமத்தொடையுந்தனிபோற்றி (௧௪௧)

சிவமொன்றுபச்சதாசிவமைந்தர்கித்தெளிவுகூர்வோர்க்குப்
பவமாற்றவருமகேசமெனப்பரவுமுருவத்தைந்தாகி
யவமாற்றியுமெய்க்கடவுளுடன்கும்பொருளேயடிபோற்றி
கவலாதெய்மைக்காக்கவருங்கருணாநிதியேயடிபோற்றி. (௧௪௨)

என்றுபோற்றுமாறுலசயியற்றிப்பணிகள்பலபுரிந்து
யன்றல்கமழுமவ்வூரில்வசித்தார்சிலவரிவர்க்காக
நன்றிபெருகுமிஞ்சியிசைநகரமதனினிதமர்ந்தார்
குணமுச்செல்வமிருமைக்கும்பெற்றூர்சற்றுங்குறைவிலரே. (௧௪௩)

அருளுமிலிங்கமானவன்பர்தங்காதைகேட்டோர்க்
கிருளறுஞ்செல்வமல்குமென்றுநன்னலங்களெண்ணும்
பெருமையுமறிவுமென்றும்பிறங்கியகதியுமாகுந்
திருமகள்கலைமகள்கைசேர்வதுந்திண்ணமாமே. (௧௪௪)

பட்டணத்துப்பிள்ளையார் புராணம் முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.





உ

கணபதி துணை.

திருச்சிற்றம்பலம்.

பதினொன்றாந்திருமுறையுள் திருவெண்காடரென்னும்
பட்டணத்துப்பிள்ளையார் அருளிச்செய்த
முதலாவது

# கோயில்நான்மணிமாலை.



திருச்சிற்றம்பலம்.

வெண்பா.

பூமேலயனறியா மோலிப் புறத்ததே
நாமே புகழ்ந்தளவை நாட்டுவோம் - பாமேவு
மேத்து கந்தான் றில்லை யிடத்துகந்தா னம்பலத்தே
கூத்து கந்தான் கொற்றக் குடை. (௧)

(கலித்துறை.)

குடைகொண்டிவ் வையமெலாங் குளிர்வித்தெரிபொற்றிகிரிப்
படைகொண்டிகறெறும் பார்த்திவராவதிற் பைம்பொற் கொன்றைத்
தொடைகொண்டவார்சடை யம்பலத்தான்றொண்டர்க் கேவல்செய்து
கடைகொண்டபிச்சைகொண் டுண்டிங்குவாழ்தல் களிப்புடைத்தே.(௨

(கழிநெடில்விருத்தம்.)

களிவந்தமுதூறிக் கன்மனத்தை யெல்லாங் கசியும்படிசெய்துகண்டறிவாரில்லா, வெளிவந்தடியேன்மனம்புகுந்ததென்றால் விரிசடையும்வெண்ணீறுஞ்செவ்வானமென்ன,வொளிவந்தபொன்னிறமுந்தொன்னடமுங்காட்டு முடையானுயர்தில்லையம்பலமொன்றல்லா, லெளிவந்தினிப்பிறர்பாற்சென்றவர்க்குப்பொய்கொண் டிடையிடைந்தபுன்மொழியா லிச்சையுரையோமே. (௩)

(இணைக்குறளாசிரியப்பா)

உரையின்வரையும்பொருளினளவு
மிருவகைப்பட்டவெல்லையுங்கடந்து
தம்மைமறந்துநின்னைநினைப்பவர்
செம்மைமனத்தினுந்தில்லைமன்றினுநட
மாடுமம்பலவாணநீடு
குன்றக்கோமான்றன்றிருப்பாவையை
நீலமேனிமாதிருத்தங்கையைத்
திருமணம்புணர்ந்தஞான்றுபெருமநின்

ருதவிழ்கொன்றைத்தாருபமதயில்
வீரவெள்விடைக்கொடியும்போரிற்
றழங்குந்தமருகப் பறையுமுழங்கொலித்
தெய்வக்கங்கையாறும்பொய்தீர்
* விளையாக்கலியெனுமாணையுநிரைநிரை
யாயிரம்வகுத்தமாயிருமருப்பின்
வெண்ணிறச்செங்கண்வேழமும்பண்ணியல்
வைதிகப்புரவியும்வானநாடு
மையறுகனகமேருமால்வரையுஞ்
செய்வயற்றில்லையாகியதொல்பெரும்
பதியுமென்
றொருபதினாயிரந்திருநெடுநாமமு
முரிமையிற்பாடித்திருமணப்பந்தரு
ளமரர்முன்புகுந்தறுகுசாத்தின்
றமர்பெயரொழுகியவரிநெடும்புத்தகத்
தென்னையுமெழுதவேண்டுவனின்னரு
ளாணைவைப்பிற்காணுணவணுவும்
வானுறநிமிர்ந்துகாட்டுங்
காளில்வானுளம்புங்கருடனுதலினே. (௪)

(வெண்பா.)

ஆதரித்தமாலுமறிந்திலனென்றஃதறிந்தே
காதலித்தநாயேற்குங்காட்டுமே - போதகத்தோற்
கம்பலத்தானீணுக கங்கணத்தான்றென்புலியூ
ரம்பலத்தான்செம்பொனடி. (௫)

(கலித்துறை.)

அடியொன்றுபாதலமேழிற்குமப்புறம்பட்டதின்பான்
முடியொன்றிவ்வண்டங்களெல்லாங்கடந்ததுமுற்றும்வெள்ளைப்
பொடியொன்றுதோளெட்டுத்திக்கின்புறத்தனபூங்கரும்பின்
செடியொன்றுதில்லைச்சிற்றம்பலத்தான்றன்றிருநடமே. (௬)

(கழிநெடில்விருத்தம்.)

நடமாடியேழுலகுமுய்யக்கொண்ட நாயகரோநான்மறையோர்தங்க ளோடும், இடமாடமதிட்டில்லைக்கோயில்கொண்டசெல்வரோயும்தருமை

---

* கலியென்பதனை விகுதிகுன்றிய முதனிலைத்தொழிற்பெயராக்கிப், பொய்தீர்விளையாக்கலியென்பதனுக்குவேதம், என்றுபொருள்கொள்க அதுவேயவனதாணையாதலை "வேதந்தானேநமதாணைச்சத்தி வடிவாய்" என்னும்புராணக்கூற்றானுமுணர்க இதனுக்குச் சத்தியமெனப் பொருள்கூறுவாருமுளர்.

தோரவிட்டு, ரிடமாடியிருந்தவளும் விலக்காவிட்டா லென்போல்வார்க் குடனிற்கவியல்வதன்று, தடமாலைமுடிசாய்த்துப்பணிந்தவானோர்* த ஞ்சுண்டாயங்கருதி நஞ்சுண்டிலே. (எ)

(நேரிசையாசிரியப்பா)

நஞ்சுமிழபகுவாய்வெஞ்சினமாசுணந்
தன்முதன்முருக்கவென்முகற்சூழ்ந்த
நீர்ச்சிறுபாம்புதன்வாய்க்கெதிர்வந்த
தேரைபைவவ்வியாங்கியான்முன்
கருவிடைவந்தவொருநாட்டொடங்கி
மறவாமறலிமுறைமுறைபேழ்வா
யயிறலையன்னவெயிற்றிடைக்கிடந்தாங்
கருணனியின்றியொருவயிருமையற்குப்
பலவுயிர்செகுத்துவல்லுதினருந்தி
யயர்த்தனனிருந்தும்போனும்பெயர்த்துமின்



றெண்டோள்விசிக்கண்டோருருகத்
தொல்லெயிலுடுத்ததில்லைமூதூ
ராடுமம்பலக்கூத்தனைப்
பாடுதல்பரவுதல்பணிதலோவிலமே. (அ)

(வெண்பா.)

இலவிதழ்வாய்வீழ்வாரிகழ்வாரவர்தங்
கலவிகடைக்கணித்துங்காணே - னிலகுமொளி
யாடகஞ்சேரம்பலத்தேயாளுடையார்நின்றாடு
நாடகங்கண்டன்பானநான். (௯)

(கலித்துறை.)

நானேபிறந்துபயன்படைத்தேனயனானெங்
கோனேயெனத்தில்லையம்பலத்தேநின்றகூத்துகந்த
தேனேதிருவுள்ளமாகியென்றீமையெல்லாமறுத்துத்
தானேபுகுந்தடியேன்மனத்தேவந்துசந்திக்கவே. (௰)

(கழிநெடில்விருத்தம்.)

சந்துபுனையவெதும்பிமலரணைதங்கவெருவியிலங்குகலையொடு
சங்குகழலநிறைந்தவயல்வர்தஞ்சொனலியமெலிந்துகிளியொடு
பந்துகழல்கண்மறந்துதளிர்புரைபண்டைநிறமுமிழந்துநிறையொடு
பன்புதவிரவனுங்கனவனொடுநண்புபெருகவிளைந்தவினையன
நந்திமுழவுதங்கமலைபெறுநங்கைமகிழவணிந்தவரவுக

*தஞ்சமமனறபாலது - தஞ்சனதகுறைபடுதுநிறது.

ணஞ்சுமிழிய முரன்றுமுபலகனைந்துகரலவலைந்தடங்கிரதி
யந்திமதியொடணிந்துதிலைநகரம்பொனணியுமரங்கினடநவி
லங்கணரசையடைந்துதொழுதிலளன்று முதலெதிரின்றுவளையுமே

(நிலமண்டிலவாசிரியப்பா.)

வளையொன்றுநிறுவியரவொன்றுபிணித்துக்
கடறடவாகமிடலொடும்வாங்கித்
திண்டோளாண்டதண்டாவமரர்க்
கமிர்தனுவளித்தமுதுபெருங்கடவுள்
கடையுகஞ்சென்றகாலத்துநெடுநில
மாழிப்பரப்பிலாழ்வதுபொருஅ
தஞ்சேலென்றுசெஞ்சேலாகித்தன்
றெய்வவுதரத்துச்சிறுசெலுப்புரையிற்
பௌவமேழேபட்டதுபௌவத்தோ
டுலகுகுழைத்தொருநாளுண்டது
முலகமூன்றுமளந்துழியாங்கவ
னிரடிநிரம்பிற்றுமிலவேதேரி
னனைப்போர்க்கல்லதவன்குறைவின்றே
யினையனாகியதனிமுதல்வானவன்
கேழற்றிருவுருவாகியாழத்
தடுக்கியவேழுமெடுத்தனனெடுத்தெடுத்
தாழியுழிகீழுறக்கிளைந்தும்
காண்பதற்கரியநின்கழலும்வேண்டு
நிகிலலோகமுநெ[illegible]மறைத்தொகுதியு
மகிலசராசரமனைத்துமுதவிய
பொன்னிறக்கடவுளன்னமாகிக்
காண்டிலாதநின்கதிர்நெடுமுடியு
மீங்கிவைகொண்டுநீங்காதுவிரும்பிச்
சிறியபொதுவின்மறுவின்விளங்கி
யேவருங்காணவாடுதியதுவெனக்
கதிசயம்விளைக்குமன்றேயதிசயம்
விளையாதுமொழிந்ததெந்தைவளையர்து
கல்வினும்வலிததுநல்விதிற்செல்லாது
தான்கிறிதாயினுமுள்ளிடைநிரம்ப
வான்பொயச்சமாயாவாசை
யிடைந்தனகிடப்பவிடும்பெறலருமையி
லைவர்கள்வர்வல்லிதிறபுகுந்து
மண்மகன்றிகிரியிலெண்மடங்குசுற்ற
வாடுபுகிடந்தபீடினெஞ்சத்து

றுழைந்தனைபுகுந்துதழைந்தநின்சடையுஞ்
செய்யவாயுமையமர்கண்டமு
நெற்றியிற்றிகழ்ந்தவொற்றைநாட்டமு
மெடுத்தபாதமுந்தடுத்தசெங்கையும்
புள்ளியாடையுமொள்ளிதின்விளங்க
நாட்கமாடுதிநன்பகூடும்
வேதநான்கும்விழுப்பெருமுனிவரு
மர்திநின்றிறமாதலின்மொழிவது
பெரியதிற்பெரியையென்றுமன்றே
சிறியதிற்சிறியையென்றுமன்றே
நிறைபொருண்மறைகளுன்குநின்னறைகழ
லிரண்டொடுமறிவினிலார்த்துவைத்த
மறையவர்தில்லைமன்றுள்கிழவோனே. (கஉ)

(வெண்பா)

கிழவருமாய்நோய்கூப்புக்கீழ்ப்பட்டுக்காமத்
துழவரும்போயோயுமாகண்டோ-மொழிதெரிய
வாயிருலிப்போதேமன்றினடமாடு
நாயனுரொன்றுரைப்போநாம். (கஙு)

(கலித்துறை.)

ாமத்திலுலென் றனுத்திருத்தேனறைமாமலர்சேர்
ாமத்திலுன்சரண்பணியேன்சார்வதென்கொடுநான்
ாமத்திலேயொருமானைத்தரித்தொருமானைவைத்தாய்
ேசமத்திலுன்றிருத்தில்லைசேர்வதோர்செ[illegible]நறியே. (கச)

(கழிநெடில்விருத்தம்)

ெநறிதருகுழலையறலென்பர்க ளிழலெழுமதியநுதலென்பர்க
ணிலவினும்வெளிதுநகை யென்பர்கணிறம்வருகலசமுலை யென்பர்க
ளறிகுவதரிதிவிடையென்பர்க ளடியிணைகமலமலரென்பர்க
ளவயவமினையமடமங்கையரழகியரமையுமவரென்செய
மறிமழுவுடையகரனென்கிலர் மறலியைமுனியுமரனென்கிலர்
மதிபொதிசடிலதரனென்கிலர் மலைமகண்மருவுபுயனென்கிலர்
ெசறிபொழினிலவுதில்லையென்கிலர் திருநடநவிலுமிறையென்கிலர்
சிலகதியருளுமரசென்கிலர் சிலர்நரகுறுவரறிவின்றியே. (கரு)

(நேரிசையாசிரியப்பா.)

அறிவிலொழுக்கமும் பிறிதுபடுபொய்யுங்
கடும்பிணித்தொகையு மிடும்பையீட்டமு
மினையனபலசர்க்கேற்றிவினையெனுந்
தொன்மீகாமனுய்ப்பவுந்நிலைக்

கருவெனுநெடுங்கரொருதுறைவைத்துப்
புலனெனுங்கோண்மீனலமந்துதொடரப்
பிறப்பெனும் பெருங்கடலுறப்புகுந்தலைக்குந்
துயர்த்திரையுவட்டிற்பெயர்ப்பிட மயர்த்துக்
குடும்பமென்னுநெடுங்கல்வீழ்த்த
நிறையெனுங்கூம்பு முரிந்துகுறையா
வுணர்வெனுநெடும்பாய் கீறிப்புணரு
மாயப்பெயர்ப்படுகாயச்சிறைக்கலங்
கலங்குபுகவிழாமுன்னமலங்கன்
மதியுடனணிந்தபொதியவிழ்சடிலத்துப்
பையரவணிந்ததெய்வநாயக
தொல்லெயிலுடுத்ததில்லைகாவல
வம்பலர்தும்பையம்பலவாணநின்
னருளெனுநலத்தார்பூட்டித்
திருவடிநெடுங்கரைசேர்த்துமா செய்யே. (௧௬)

(வெண்பா.)

செய்யதிருமேனிச்சிற்றம்பலவருக்கென்
னையல்வளைகொடுத்தல்சாலுமே-யையன்றேர்
சேயேவருமளவிற் சிந்தாதமாத்திரமே
தாயேநமதுகையிற்சங்கு. (௧௭)

(கலித்துறை.)

சங்கிடத்தானிடத் தான்றனதாகச்சமைந்தொருத்தி
யங்கிடத்தாடில்லையம்பலக்கூத்தற்கவிர்சடைமேற்
கொங்கிடத்தார்மலர்க்கொன்றையென்றெங்கைநீயுமொரு
பங்கிடத்தான்வல்லையேயில்லையேலுன்பசப்பொழியே. (௧௮)

(கழிநெடில்விருத்தம்.)

ஒழிந்ததெங்களுறவென்கொலோவெரியிலொன்னலார்கள்புரமுன்
னோர்நாள்,விழுந்தெரிந்துதுகளாகவென்றிசெய்தவில்லிதில்லைநகர்போ
லியார், சுழுந்தவுந்தியி லழுந்திமேகலை தொடக்கநின்றவர்நடக்கொங்,
தழிந்தசிந்தையினும் வந்ததாகிலுமோர் சிந்தையாயொழிவதல்லவே.()

(நேரிசையாசிரியப்பா.)

அல்லல்வாழ்க்கை வல்லிதிற்செலுத்தற்குக்
கைத்தேருழந்துகார்வருமென்று
வித்துவிதைத்தும் விண்பார்த்திருந்துங்
கிளையுடன்றவிரப்பொருளுடன்கொண்டு
முளைமுதிர்பருவத்துப் பதியெனவழங்கியு
மருளாவயவரம்பிடைநடந்து

மிருளுறுபெளவத் * தெந்திரக்கடாஅய்த்
துன்றுதிரைப்பரப்பிற்குன்றுபார்த்தியங்கியு
மாற்றல்வேந்தற்குச்சோற்றுக்கடன்பூண்டுந்
தாளுழந்தோடியும் வாளுழந்துண்டு
மறியாவொருவனைச்செறிவந்துதெருட்டியுஞ்
சொற்பலபுனைந்துங்கற்றனகழறியுங்
குடும்பப்பாச நெடுந்தொடர்ப்பூட்டி
யையவரைந்திடத்திரிப்பநொய்திற்
பிறந்தாங்கிறந்து மிறந்தாங்குபிறந்துங்
கணத்திடைத்தோன்றிக் கணத்திடைக்கரக்குங்
கொப்புட்செய்கையொப்பின்மின்போ
துலப்பில்யோனிக்கலத்தூமயங்கியு
நெய்யெரிவளர்த்துப்பெய்முகிலபெயறாந்
தெய்வவேதியர்தில்லைமூதூ
ராடகப்பொதுவினாடகநவிற்றுங்
கடவுட்கண்ணுதனாட்டுயன்றெடுத்த
பாதப்போதும்பாய்புலிப்பட்டு
மீதியாத்தசைத்தவெள்ளெயிற்றரவுஞ்
சேயுயரகலத் தாயிரங்குடுமி
மணிகிடந் திமைக்குமொருபேராரமு
மருள்பொதிந்தலர்ந்ததிருவாய்மலரு
நெற்றியிற்றிகழ்ந்தவொற்றைநாட்டமுங்
கங்கைவழங்குந்திங்கள்வேணியுங்
கண்ணிடைப்பொறித்து மனத்திடையழுத்தியாங்
குண்மகிழ்ந்துரைக்கவுறுதவஞ்செய்தனை
நான்முகன்பதத்தின் மேனிகழ்பதந்தா
னுறுதற்கரியதுமுண்டோ
பெறுதற்கரியதோர் பேறுபெற்றேற்கே. (உ0)

(வெண்பா.)

பெற்றோர்பிடிக்கப்பிழைத்துச்செவிலியர்கள்
சுற்றோடவோடித்தொழாநிற்கு—மொற்றைக்கைம்
மாமறுகச்சீறியசிற்றம்பலத்தான்மான்றேர்போய்
கோமறுகிற்பேதைக்குழாம். (உக)

(கலித்துறை.)

பேதையெங்கேயினித்தேறியுய்வாள்பிரமன்றனக்குத்
தாதைதன்றாதையென்றேத்தும்பிரான்றண்புலிசைப்பிரான்

* கோதைமந்தாமத்தன்கொன்றைதொடர்கின்றகோலவெள்ளி
பூதையுங்காருந்தனிபொர்க்கூடியுலர்விபவே. (௨௨)

(கழிநெடில்விருத்தம்.)

உலவுசலதிவாழ்விடமமரர்தொழவுறுவென
றகருமொருவழியினிறுதி யொருவராழின
புலவுகமழ் ०கரோடிகையுடையபுனிதர்பூசார்
புலிசையலர்செய்போதனி பொழிலினிழலின்வாழ்வதோர்
கலவமயிலனார்சுருள்கரியகுழலினார்குயில்
கருதுமொழியினார்கடைநெடியவிழியினாரித்
ழிலவிலழகியாரிடைகொடியின்வடிவினார்வடி
வெழுதுமருமையாரென திரயமுழுதுமாள்வரோ. (௨௩)

(இணைக்குறளாசிரியப்பா.)

ஆளெனப்புகுந்தின்வந்தடைந்திலமத்தநின்
றுளிணைவறலையினியற்றி
வழிவழிவந்தமரபினமொழிவது
ணைந்தெழுத்தவையென்றிங்கையிறகிடத்தி
நனவேபோலநாடொறும்பழகிக்
கனவிலுமாவிற்றுங் காதலேம்வினைகெடக்
கேட்பதுநின்பெருங்கீர்த்திமீட்பது
நின்னெறியல்லாப் புன்னெறிபடர்ந்த
மதியினெஞ்சத்தை வளாகதுநிதியென
வருத்துசெய்திடுவ துருத்திராசாதனம
காலையுமாலையுங்கால்பெயர்த்திடுவதுன்
ஞலயம்வலம்வருவதற்கேசால்பினிற்
கைகொடுகுயிற்று வதையகின்னது
கோயிற்பல்பணி குறித்தேயோயா
துருகிநின்னிணைந்தருவிசோரக்
கண்ணிற்காண்பதெவ் வுலகினுங்காண்பன
வெல்லா
நீயேயாகின்றதோர்நிலையே
காயேன்
றலைகொடுசார்வதுன்சரண்வழியல்லா
லலைகடல்பிறழினுமடாதேயதனாற்
பொய்த்தவவேடர்கைத்தகப்படுத்தற்கு

* கோதையமந்தாமதத கொன்றையென்பதூஉம்பாடம்.
० கரோடிகை-எ-து-தலைமாலை.

அஞ்சச்செலுவின்காரிலைப்போக்கிச்
சமயப்படுகுழிசமைத்தாங்கமைவயின்
மயிலிடமாக்கலைவலியப்புகுத்து
மாறுவிரதத்தகப்படுத்தாழ்த்து
வினைவுணர்வெனக்குவருமோ வுளர்தரு
நுரையுந்திரையு * கொப்புறுகொட்பும்
வரையில்சீகர வாரியுங்குரைகடற்
பெருக்குஞ்சிறுத்தும் பிறங்குவதோன்றி
யெண்ணிலவாகி யிருங்கடலடங்கும்
தன்மைபோலச்சராசரமனைத்து
நின்னிடைத்தோன்றி நின்னிடையடங்குநீ
யொன்றினுந்தோன்றாயொன்றினுமடங்காய்
வானோர்க்கரியாய்மறைகளுக்கெட்டாய்
நான்மறையாளர் நடுவுள்புக்கடங்கிச்
செம்பொற்றில்லைமூதா
ரம்பலத்தாடு மும்பர்நாயகனே (௨௪)

(வெண்பா.)

நாயனையவென்னைப்பொருட்படுத்திநன்களித்துத்
தாயனையனாயருளுந்தம்பிரான்—றூயவிரை
மென்றுழாய்மாலொடயன்றேடவியன்றில்லை
மன்றுளேயாடுமணி. (௨௫)

(கலித்துறை.)

மணிவாய்முகிழ்ப்பருப்பத்திருமுகம்வேர்பவம்மன்றுக்கெல்லா
மணியாயருணடமாடும்பிரானையடைந்துருகிப்
பணியாய்புலன்வழிபோநெஞ்சமேயினிப்பையப்பையப்
பிணியாய்க்கடவழிசாதியெல்லோரும்பிணமென்னவே. (௨௬)

(கழிநெடில்விருத்தம்.)

என்னுமிளிமடவரலாய்செய்குவதினமாய்வண்டுகண்மலர் கிண்டித்
தென்னவெனமுரல்பொழில்சூழ்தில்லையுளானார்திருமுடியணிதாமம்
தன்னாலல்லதுதீராதென்னிடர்தகையாதுயிர்கருமுகிலேறி
மின்னுகின்றது துளிவாடையும்வர வீசாநின்றதுபேசாயே. (௨௭)

(இணைக்குறளாசியப்பா.)

பேசுவாழிபேசுவாழி
பாசையொடுமயங்கிமாசுறுமனமே
பேசுவாழிபேசுவாழி

---

* கொப்பு-எ-து-நடை.

கண்டன மறையு முண்டன மலமும்
பூசினமாசாம்புணர்ந்தனபிறப்பு
நிறைந்தனருறையு முயர்ந்தனபணியும்
பிறந்தனவிறக்கும்பெரியனசிறுக்கு
மொன்றொன்றொருவழியில்லாவன்றியுஞ்
செல்வமொடுபிறந்தோர் தேசொடுதிகழ்ந்தோர்
கல்வியிற்சிறந்தோர் கடுந்திறன்மிகுந்தோர்
கொடையிற்பொலிந்தோர் படையிற்பயின்றோர்
குலத்தினுயர்ந்தோர் நலத்தினின்வந்தோ
ரனையவொருகுலத்தின ரிறந்தோரனையவர்
பெருநின்றிலபோலுந்தெரி
னீயுமஃதறிதியன்றேமாயப்
பேய்த்தேர்போன்றுநீப்பருமுறக்கத்துக்
கனவேபோன்றுநனவுபெயர்பெற்ற
மாயவாழ்க்கையைமதித்துக்காயத்தைக்
கல்லினும்வலிதாக் கருதிப்பொல்லாத்
தன்மையரிழிவுசார்ந்தனைநீயு
நன்மையிற்றிரிந்த புன்மையையாதலி
னழுக்குடைப்புலன்வழி யிழுக்கத்தினொழுகி
வளைவாய்த்தூண்டிலி னுள்ளிரைவிழுங்கும்
பன்மீன்போலவு
மின்னுபுவிளக்கத்துவிட்டில்போலவு
மாசையாம்பரிசத் தியானைபோலவு
மோசையின்விளிந்த புள்ளுப்போலவும்
வீசியமணத்தின் வண்டுபோலவு
முறுவதுணராச் செறுவுழிச்சேர்ந்தனை
நல்லாறாற்றுத்தன்னகப்படுக்கு
மழிவிலகீடத்து நந்துழிப்போல
வாசைச்சங்கிலிப் பாசத்தொடர்பட்
டிடர்கெழுமனத்தினொ டியற்றுவதறியாது
குடர்கெழுசிறையறைக் குறங்குபுகித்திடத்தி
கறைவினைந்த கன்றெனவிரங்கி
மறவாமனத்து மாசறுமடியார்க்
கருள்சுரந்தளிக்குமற்புதக்கூத்தனை
மறையவர்தில்லை மன்றுளாடு
மிறைவனென்கிலை யென்னினைந்தனையே

(வெண்பா)

நினையார்மெலியார்நிறைபழியார்வளராய்
புனைவார்க்குக்கொன்றைபொருதுவோ-வனைவிரு
மெச்சியேகாணவியன்றில்லையானருளென்
பிச்சியேநாணைப்பெறும். (உகூ)

(கலித்துறை.)

பெறுகின்றவெண்ணிலிதாயரும்பேறுறுமயானுமென்னை
யுறுகின்றதுன்பங்களாயிரகோடியுமோய்வொழிஞ்சென்
றிறுகின்றநாள்களுமாகிக்கிடந்தவிடுக்கவெல்லா
மறுகின்றதில்லையாளுடையான்செம்பொனம்பலத்தே. (கூ0)

(கழிநெடில்விருத்தம்.)

அம்பலவாங்கனரடைந்தவர்தமக்கே
யன்புடையவொன்றுமிதெனுனையயுரித்துக்
கம்பலமுவந்தருளுவீர்மதனன்வேவக்
கண்டருளுவீர்பெரியகாதலறியாதே
வம்பலர்நிறைந்துவசை பேசவொருமாடே
வாடையுயிரீரமணிமாமையுமிழந்தென்
கொம்பலமருந்தகைமைகண்டுதகவின்றிக்
கொன்றையருணீர்கொடியிரொன்றருளுவீரோ. (கூக)

(இணைக்குறளாசிரியப்பா.)

அருளுவாழியருளுவாழி
புரிசடைக்கடவுளருளுவாழி
தோன்றுழித்தோன்றிநிலைநவக்கறங்கும்
புற்புதச்செவ்வியின்மக்களியாக்கைக்கு
நினைப்பினுங்கடிதே யிளமைநீக்க
மதனினுங்கடிதேமூப்பின்றொடர்ச்சி
யதனினுங்கடிதேகதுமெனமரணம்
வாணாள்பருகியுடம்பைவறிதாக்கி
நாணாள்பயின்றநல்காக்கூற்ற
மினையதன்மையதிதுவேயிதனை
யெனதெனக்கருதியிதற்கென்றுதொடங்கிச்
செய்தனசிலவேசெய்வனசிலவே
செய்யாநிற்பனசிலவேயவற்றிடை
நன்றெனபசிலவேதீதெனபசிலவே
யொன்றினும்படாதன சிலவேயென்றிவை
நினைத்திடைநினைந்துகளிப்பவுங்கலுழ்பவுங்

கணக்கில்கோடித்தொகுதியனைத்து
மொன்றொன்றுணர்வுழிவழிமோவனைத்து
மொன்றாவுணர்வுழிவருமோவென்றொன்று
தெளிவுழித்தேறல்செல்லேமவிய
மனத்தின்செய்கைமறந்துவேநீயே
யரிவபசாலவெம்பெருமதெரிவுழி
லுண்டாய்த்தோன்றுவயாவையுநீயே
கண்டனையவைநினைககாணுவதாகா
னின்வருன்மறைந்தோயலலையுன்னை
மாயாமன்னினைநீயேவாழி
மன்னியுஞ்சிறுமையிற்கரந்தோயல்லை
பெருமையிற்பெரியோய்பெயர்த்துநீயே
பெருகியுஞ்சேணிடைநின்றோயல்லை
தேர்வோர்க்குத்தம்மினுமணியைநீயே
நண்ணியுமிடையொன்றின்மறைந்தோயலலை
இடையிட்டுநின்னைமறைப்பதுமிலலை
மறைப்பினுமதுவு
நீயேயாகிநின்றதோர்நிலையே
ஆதலினான்று
நினைப்பருங்காட்சிநின்னிலையிதுவே
நினைப்புறுங்காட்சியெந்நிலையதுவே
யினிநனியிரப்பதொன்றுடையமனமருண்டு
புன்மையினினைந்துப்புலன்வழிபடரினு
நின்னியல்பினினைந்தேமாருநன்னெறி
யினைக்குபாநினைகப்பெறுதலைத்தொன்று
நீயேயருளலவேண்டுமவெய்துநிர்
கயிலைபுல்லெனவெறிவிரமபுவழிதாக
விம்பருய்யவம்பலமபொலியத்
திருவளர்தில்லைமூதூ
ரருநடங்குருற்றுமாதிவானவனே. (உஉ)

(வெண்பா.)

வானோர்பணியமணியாசனத்திருக்கு
மானதசெல்வத்தரசன்றே—மானுகம்
பாதிப்பார்நின்றும்மைபம்பொன்னினம்பலத்தே
வாதிபபார்வேண்டாதவாழ்வு.

---

* வாழ்நாள் - வாணாளெனமரீஇயது.

(கலித்துறை.)

வாழ்வாகவுந்தங்கள் வைப்பாகவுமுறையோர்வணங்க
வான்வாய்திருத்தில்லையம்பலத்தாயுன்னையன்றியொன்றைத்
தாழ்வாரொறிவார்கடனஞ்சையுண்டிலையாகிலன்றே
மாள்வார்சிலரையன்றோதெய்வமாகவணங்குவதே. (கச)

(கழிநெடில்விருத்தம்.)

வணங்குமிடையீர்வறிதுவல்லிறைடையாண்மேன்
மாரசரமாரிபொழியப்பெறுமனத்தோ
டிணங்கியிவடானுமெலியப்பெறுமிடர்க்கே
யூதையெரிதூவியுலவப்பெறுமடுத்தே
பிணங்கியரவோடுசடையாடநடமாடும்
பித்தனெனவும்பிதயபித்தனையுமோரீ
ரணங்குவெறியாடுமறியாடுமெதுவீரு
மையலையுமல்லலையுமல்லதறியீரோ. (கரு)

(நேரிசையாசிரியப்பா.)

ஈரவேரித்தார் வழங்குசடிலத்துக்
குதிகொள்கங்கைமதியின்மீதசைய
வண்டியங்குவளைப்பினெண்டோட்செல்வ
வொருபாற்றோடுமொருபாற்குழையு
மிருபாற்பட்ட மேனியெங்கை
யொல்லொளிப்பழனத் தில்லைமூது
ராடகப்பொதுவி னடகநவிற்று
மிமையாநாட்டத் தொருபெருங்கடவுள்
வானவர்வணங்குந் தாதையானே
மதுமழைபொழியும் புதுமந்தாரத்துத்
தேனியங்கொருசிறைக்கானகத்தியற்றிய
தெய்வமண்டபத் தைவகையமளிச்
சிங்கஞ்சுமப்ப வேறிமங்கைய
ரிமையாநாட்டத் தமையாநோக்கத்
தம்மார்புப்புருகச் செம்மாந்திருக்கு
மாணுச்செல்வத்து வானோரின்ப
மதுவேயெய்திறுமெய்துகைதுமெனத்
தெறுசொலாளருசினத்திருகி
யெற்றியுமீர்த்தும் [illegible]றங்கொளீஇ
[illegible]ர்ந்தும்போழ்ந்துமெற்றுபுகுடைந்தும்
[illegible]ந்துறைத்து மதகரயக்கீந்துஞ்
[illegible]ற்றெய்துக் [illegible]யும்

புழுக்குடைப்புழுவத் தழுக்கியல்சேற்றுப்
பன்னெடுங்கால மழுந்தியின்று
வரையிறந்தடந்து மாறுக்கிடந்துயர்
நிரையஞ்சேரினுஞ் சேர்கவுரையிடை
யேனோரென்னையா னாதுவிரும்பி
நல்லனெனினு மெனகவலோ
யல்லனெனினு மென்கவிலலா
திருவொடுதிளைதலும் பெருவளஞ்சிறையா
தினைபத்தழுந்தினு மழுந்துகவெல்லாத்
துன்பந்துறையினுந் துறைகமுன்பி
விளையொடுபழகிச் சுற்றமுப்புக்குறுக
தென்றுமிருக்கினு மிருக்கவன்றி
யின்றேயிறக்கினு மிறக்கவொன்றினும்
வேண்டலுமிலனே வெறுத்தலுமிலனே
யாண்டகைக்குரிசினின் னடியரொடுகுழுமித்
தெய்வக்கூத்துநின் செய்யபாதமும்
மடையவுமனுகவும்பெற்ற
கிடையாச்செல்வங் கிடைத்தலானே. (௧௬)

(வெண்பா.)

ஆனேபேபோந்தாலழிவுண்டேயன்புடைய
நானேதான்வாழ்ந்திடினுநன்றன்றே—வானேறுங்கு
வாமாண்பொழிற்றில்லைமன்றைப்பொலிவித்த
கோமானையிதெருவேகொண்டு. (௧௭)

(கலித்துறை.)

கொண்டல்வண்ணத்தவனுமுகனிந்திரன்கோமருடத்
தண்டர்மின்டிகதொழுமம்பலக்கூத்தனுக்கன்புசெய்யா
மிண்டாமின்டித்திரிவாரெனக்கென்னினிநானவன்றன்
றொண்டர்தொண்டர்க்குத்தொழும்பாய்த்திரியத்தொடங்கினனே (௧௮)

(கழிநெடிலவிருத்தம.)

தொடாநகைத்தங்கமுன்புளவாயின
தொழிலகண்மறுத்தொன்றுமொன்றியிடாதொரு
நளிவுதலைக்கொள்ளும்புன்புலைவாரிக
டேனையொழுக்கண்டுசிந்தனையோய்வொடு
நடைகெடமுற்கொண்டபெண்டிர்பொருவொரு
கடலைநமக்கென்று வந்தனபேசிட
நலியிருமற்கஞ்சியுண்டிவெறுவிழு

நரகயுடற்கன்புகொண்டலைவேனினி
யிடலொழியப்பன்னிலங்கையர்கோனொரு
விரலினமுக்குண்டுபண்பலபாடிய
விரகுசெவிக்கொண்டுமுன்புளதாகிய
வெகுளிதவிர்த்தன்றுபொன்றியிடாவகை
திடமருளவைக்குஞ்செழுஞ்சுடரூறிய
தெளியமுதத்தின் கொழுஞ்சுவைநீடிய
தில்லைநகர்ச்செம்பொனம்பலமேவிய
சிவனைநினைகருந்தவஞ்சதுராவதே. (கூச)

(நேரிசையாசிரியப்பா.)

சதுர்முகன் றந்தைக்குச்சக்கிரவிடுகடவு
ளாழிகொடுத்தபேரருள்போற்றி
முயற்சியொடுபணிந்த வியக்கர்கோனுக்கு
மாநிதியிரண்டுமாணுப்பெருவளத்
தளகையொன்றுதளர்வின்றிநிறுவிய
செல்வங்கொடுத்தசெல்வம் போற்றி
தாணிழலடைந்தமாணிக்காக
நாண்முறைபிறழாது கோண்முறைவலித்துப்
பதைத்துவருகூற்றைப்படிமிசைத்தெறிகழ
லுதைத்துயிரளித்தவுதவிபோற்றி
குலைகுலைகுலைந்தநிலையாத்தேவர்
படுபோவளமிடையின்றிவிலக்கிக்
கடல்விடமருந்தினகருணைபோற்றி
தவிராச்சீற்றத்தவுணர்மூவெயி
லொல்லனல்கொளுவியொருநொடிபொடிபட
வில்லொன்றுவளைத்தவீரம்போற்றி
பூமன்கரும்பொடுபொடிபடவித்துக்
காமனைப்பார்த்த கண்ணுதல்போற்றி
தெய்வயாளிகைமுயன்று கிழித்தென்க்
கரியொன்றுரித்த பெருவிறல்போற்றி
பண்டுபெரும்போர்ப்பார்த்தனுக்காகக்
கொலன்கடந்தகோலம்போற்றி
விரம்பதமொன்றில் வெள்ளிமலையெடுத்த
வரக்கனைநெரித்தவாண்மைபோற்றி
விலங்கல்விண்டுவிழுந்தென்முன்னாட்
சலந்தரற்றடிந்த தண்டம்போற்றி
தாதையையெறிந்தவேதியச்சிறுவற்குப்

பரிகலங்கொடுத்ததிருவுளம்போற்றி
நின்முதல்வழிபடத்தன்மகற்றடிந்த
தொண்டர்மனையிலுண்டல்போற்றி
வெண்ணெயுண்ணவென்றுபுவந்து
நந்தாவிளக்கை நுந்துபெயர்த்த
தாவுபுல்லெலிக்குழுவுலகாள
கொய்தினிலளித்தகைவளம்போற்றி
பொங்குளையழல்வாய்ப்புகைவிழியொருதனிச்
சிங்கங்கொன்றசேவகம்போற்றி
வரிமிடற்றெறுழ்வலிமணியுருபகுவா
யுரகம்பூண்டவொப்பனைபோற்றி
கங்கையுங்கடுக்கையுங் கலந்துழியொருபாற்
றிங்கள்சூடியசெஞ்சடைபோற்றி
கடவுளிருவரடியுமுடியுங்
காண்டல்வேண்டக்கனற்பிழம்பாகி
நீண்டுநின்ற நீளம்போற்றி
யாலம்பில்குநின் சூலம்போற்றி
கூறுதற்கரியநின்னேறுபோற்றி
யேகவெற்பன்மகிழுமகட்கிடப்
பாகங்கொடுத்தபண்புபோற்றி
தில்லைமாநகர்போற்றிதில்லையுட்
செம்பொனம்பலம்போற்றியம்பலத்
தாடுநாடகம்போற்றியென்றுங்
கென்றும்போற்றினுமென்றனக்கிறைவ
வாற்றலில்லையாயினும்
போற்றிபோற்றிநின்பொலன்பூவடிக்கே. (௪௦)

திருச்சிற்றம்பலம்.

கோயில் நான்மணிமாலைமுற்றிற்று.



கணபதிதுணை.

பதினொன்றாந் திருமுறையுள்

திருவெண்காடரென்னும்

பட்டணத்துப்பிள்ளையார் அருளிச்செய்த

இரண்டாவது

திருவிடைமருதூர்

# மும்மணிக்கோவை

(*)

திருச்சிற்றம்பலம்.

இணைகுறளாசிரியப்பா.

தெய்வத் தாமரைச் செவ்வியின் மலர்ந்து
வாடாப் புதுமலர்த் தோடெனச் சிவந்து
சிலம்புங் கழலு மலம்பப் புனைந்து
கூற்றி னாற்றன் மாற்றிப் போற்றுது
வலம்புரி நெடுமா லேனமாய் நிலம்புக்
காற்றலி னகழத் தோற்றுது நிமிர்ந்து
பத்தியடியவர் பச்சிலை யிடினு
முத்திகொடுத்து முன்னின் றருளித்
திகழ்ந்துள தொருபாற் றிருவடி யகஞ்சேந்து
மறுவில் கற்பகத் துறுதளிர் வாங்கி
நெய்யிற் றோய்த்த செவ்வித் தாகி
நூபுரங் கிடப்பினு நொந்து தேவர்
மடவரன் மகளிர் வணக்குபு வீழ்த்த
சின்னப் பன்மலர் தீண்டிடச் சிவந்து
பஞ்சியு மணிச்சமு மெஞ்ச வெஞ்சாத்
திருவொடும் பொலியு மொருபாற் றிருவடி
நீலப் புள்ளி வாளுகிர் வேங்கைத்
தோலின் கலிங்க மேல்விரித் தசைத்து
நச்செயிற் றரவக் கச்சையாப் புறத்துப்
பொலிந்துள தொருபாற் றிருவிடை யிளங்கொளி
யாத்த வாடை விரித்து மீதுடீஇ
யார்க்குமணி மேகலை யொருங்குடன் சாத்திய
ப ந்திற்றுகு மொருபாற் றிருவிடை

செங்க ணரவும் பைங்க ணாமையுங்
கேழற் கோடும் வீழ்திர ளக்கு
நுடங்கு நூலு மிடங்கொண்டு புனைந்து
தவளநீ றணிந்ததோர் பவளவெற் பென்ன
வொளியுடன் றிகழு மொருபா லாகம்
வாரும் வடமு மேர்பெறப் புனைந்து
செஞ்சாந் தணிந்து குங்கும மெழுதிப்
பொற்று மணாயின் முற்று முகிழென
வுலகே ழீன்று நிலையிற் றளரா
முலையுடன் பொலியு மொருபா லாக
மயில்வா யரவம் வயின்வயி னணிந்து
மூவிலை வேலும் பூவாய் மழுவுந்
தமருகப் பறையு மமர்தரத் தாங்கிச்
சிறந்துள தொருபாற் றிருக்கரஞ் செறிந்த
சூடகம் விளங்கிய வாடகக் கழங்குட
னொம்மென் பந்து மம்மென் கிள்ளையுந்
தரித்தே திகழு மொருபாற் றிருக்கர
மிரவியு மெரியும் விரவிய வெம்மையி
னொருபால் விளங்குந் திருநெடு நாட்ட
நவ்வி மானின் செவ்வித் தாகிப்
பாலிற் கிடந்த நீலம் போன்று
குண்டு நீர்க் குவளையிற் குளிர்ந்து நிறம்பயின்
றெம்மனோர்க் கடுத்த மம்மர்க்கிரங்கி
யுலகேழ் புரக்கு மொருபா னாட்ட
கொச்சிப் பூவும் பச்சை மத்தமுங்
கொன்றைப் போது மென்றளிர்த் தும்பையுங்
கங்கை யாறும் பைங்கட் டலையு
மரவு மதியமும் விரவித் தொடுத்துச்
சூடா மாலை சூடிப் பீடுகெழு
நெருப்பிற் றிரித்தனைய வுருக்கிளர் சடிலமொடு
நான்முகன் கரந்த பானிற வன்னங்
காணா வண்ணங் கருத்தையுங் கடந்து
சேணிகந் துளதே யொருபாற் றிருமுடி
ஓபணிய
கடவுட் கற்பின் மடவரன் மகளிர்
கற்பக வனத்துப் பொற்பூ வங்கிக்

கைவைத்தும் புனைந்த தெய்வ மாலை
நீலக் குழன்மிசை வளைஇ மேனிவந்து
வண்டுந் தேனுங் கிண்டிபு திளைப்பத்
திருவுடன் பொலியு மொருபாற் றிருமுடி
யினைய வண்ணத்து நினைவருங் காட்சி
யிருவயி னுருவு மொரு வயிற் றாகி
வலப்பா னுட்ட மிடப்பா னோக்க
வாணுதல்பாக காணுதல் செய்ய
வலப்பாற் றிருக்கர மிடப்பால் வனமுலை
தைவந்து வருட மெய்ம்மயிர் பொடித்தாங்
குலக மேழும் பன்முறை யீன்று
மருதிடங் கொண்ட வொருதனிக் கடவுளின்
றிருவடி பரவுதும்யாமேநெடுநா
ளிறந்தும் பிறந்து மிளைத்தன மறந்துஞ்
சிறைக்கருப் பாசயஞ் சேரா
மறித்தும் புகாஅ வாழ்வுபெறற் பொருட்டே (௪)

நேரிசைவெண்பா.

பொருளுங் குலனும் புகழுந் திறனு
மருளு மறிவு மனைத்து-மொருவர்
கருதாவெள்ள பார்கருங் கறைமிடற்றூய்தொல்லை
மருதாவென் பார்க்கு வரும். (௫)

கட்டளைக்கலித்துறை.

வருந்தே னிறந்தும் பிறந்து மயக்கும் புலன் வழிபோய்ப்
பொருந்தேனரகிற் புகுகின்றி லேன்புகழ் மாமருதிற்
பெருந்தேன் முகந்துகொண் டுண்டு பிறிதொன்றி லாசையின்றி
யிருந்தே னினிச்சென் றிரவே னொருவரை யாதொன்றுமே. (௬)

நேரிசையாசிரியப்பா.

ஒன்றினோ டொன்று சென்றுமுகி றடவி
யாடுகொடு நுடங்கும் பீடுகெழு மாளிகை
தெய்வக் கம்மியர் கைம்முயன்று வகுத்த
வோவநூற் செம்மைப் பூவியல் வீதி
குயிலெனை மொழியுமயிலியற் சாயன்
மான்மற விழிக்கு மானார் செல்வத்
திடைமரு திடங்கொண் டிருந்த வெந்தை
சுடர்மழு வலங்கொண் டிருந்த தோன்றா
தூரணந் தொடராப் பூரண புராண

காரண னறியாக் காரணக் கடவுள்
சோதிச் சுடரொளி யாதித் தனிப்பொரு
ளேக நாயக யோக நாயக
யானொன் றுணர்த்துவ துளதே யான்முன்
னனந்தலை யுலகத் தனந்த யோனியிற்
பிறந்துழிப் பிறவா திறங்கெனச் சுழன்றுழீஇத்
தோற்றும் பொழுதினீற்றுத் துன்பத்
தியாயுறு துயரமு மியானுறு துயரமு
மிறக்கும் பொழுதி னறப்பெருந் துன்பமு
நீயல தறிகுநர் யாரோ யதனு
லியா னினிப் பிறத்த லாற்றே னஃதான்
றும்பவந் துடைத்த னிற்பிடித் தல்லது
பிறிதொரு நெறியி னில்லையந் நெறிக்கு
வேண்டலும் வெறுத்தலு மாண்டொன்றிற் படரா
வுள்ளமொன் றுடைமை வேண்டு மஃதன்றி
யைம்புல னேவ லாணைவழி நின்று
தானல தொன்றைத் தானென நினையு
மிதுவென துள்ள மாதலி னிதுகொடு
நின்னை நினைப்ப தெங்ஙன முன்னங்
கற்பனை யாகக் கடனீர் நீந்தின
ரெற்பிற ருளரோ விறைவ கற்பங்
கடத்தல் யான்பெறவும் வேண்டும் கடத்தற்கு
நினைத்தல் யான்பெறவும் வேண்டு நினைத்தற்கு
நெஞ்சுநெறி நிற்கவும் வேண்டு நஞ்சுபொதி
யுறையெயிற் றரவம் பூண்ட
கறைகெழு மிடற்றெங் கண்ணுதலோயே.

நேரிசைவெண்பா.

## இணைக்குறளாசிரியப்பா.

வாழ்ந்தன மென்று தாழ்ந்தவர்க் குதவாது
தன்னுயிர்க் கிரங்கி மன்னுயிர்க் கிரங்கா
துண்டிப் பொருட்டார் கண்டன வெஃகி
யளியடு நர்க்குச் சுவைபல பகர்ந்தே
யாரா வுண்டி யயின்றன ராகித்
தூராக் குழியைத் தூர்த்துப் பாரா
விழுப்பமுங் குலனு மொழுக்கமுங் கல்வியுந்
தன்னிற் சிறந்த நன்மூ தாளரைக்
கூஉய்யமுன் னின்றுதன் னேவல் கேட்குஞ்
சிறுஅர்த் தொகுதியி னுறுஅப் பேசியும்
பொய்யொடுபுன்மைதன் புல்லர்க்குப் புகன்று
மெய்யு மாணமு மேன்மையு மொரீஇத்
தன்னைத் தேறி முன்னையோர் கொடுத்த
ளக் கிழத்தி யாகிய வங்கிலைச்
அந் தகைய ளாயினு
ல் செல்லாது காவலொடு
ளாருத்தி யுண்டிவேட்டிருப்ப
கண்ணெய்போ லத்தள்ளாது
ளைக்குப் போகம்விற் றுண்ணு
ந்தைய ராகந் தேய்ந்து
லாது வேற்றோர் மனைவயிற்
தையர் பொற்பு நனி கேட்டுப்
து நுழைவழி நோக்கியு
மாந்தர் தம்
க்த வெவ்வேறு காட்சியி
ால முகமலர்ந்
த னின்

பார்ப்புடன் வெருவப் பகுவாய் வாளைகள்
போர்த் தொழில் புரியும் பொருகா விரியு
மருதமுஞ் சூழ்ந்த மருதவாண
சுருதியுந் தொடராச் சுருதிநாயக
பத்தருக் கெய்ப்பினில் வைப்பென வுதவு
முத்தித் தாள மூவா முதல்வநின்
திருவடி பிடித்து வெருவரலவிட்டு
மக்களு மனைவியு மொக்கலு நிதியும்
பொருளென நினையாதுன் னருளினை நினைந்
திந்திரச் செல்வமு மெட்டுச் சித்தியும்
வந்துழி வந்துழி மறுக்கன ரொதுங்கிச்
சின்னச் சீரை துன்னற் கோவண
மறுதற் கீளொடு பெறுவது புனைந்து
சிதவ லோடொன் றுகவுழி யெடுத்தாங்
கிடுவோ ருளரெனி னல்லிலைபினை யயின்று
படுதரைப் பாயலிற பள்ளிமேவி
யோவாத் தகவெனு மரிவையைத் தழீஇ
மகவெனப் பல்லுயி ரனைத்தையு மொக்கப்
பார்க்குநின்
செல்வக் கடவுட் டொண்டர் வாழ்வும்
பற்றிப் பார்க்கி லுற்றநா யேற்குக்
குளப்படி நீரு மளப்பருந் தன்மைப்
பிரளயச் சலதியு மிருவகைப் பொருளு
மொப்பினு மொவ்வாத் துப்பிற் றுதலி
னின்சீ ரடியார் தஞ்சீ ரடியார்க்
கடிமை பூண்டு நெடுநாட் பழகி
மூடலை யாக்கையொடு புடைபட் டொழுகியவர்
காற்றலை யேவலென் றலைத்தலை யேற்றுக்
கண்டது காணி னல்லதொன்
றுண்டோ மற்றெனக் குள்ளது பிறிதே. (௭)

நேரிசைவெண்பா.

பிறிந்தே னரகம் பிறவாத வண்ண
மறிந்தே னனங்கவே ளம்பிற்—செறிந்த
பொருதவட்ட விற்பிழைத்துப் போந்தேன் புராணன்
மருதவட்டந் தன்னுள்ளே வந்து. (௮)

### கட்டளைக்கலித்துறை.

வந்திக்கண்டாயடி யாரைக்கண்டான்மற வாதுநெஞ்சே
சிந்திக்கண்டாயரன் செம்பொற் கழலிரு மாமருதைச்
சந்திக்கண்டாயில்லை யாயினமன்றமர் தாங்கொடுபோ
யுந்திக்கண்டாய்நிரை யத்துன்னை வீழ்த்தி யுழக்குவரே. (சு

### இணைக்குறளாசிரியப்பா

உழப்பின் வாரா வுறுதிக ளுளவோ
கழப்பின் வாராக் கையறவுளவோ
அதனால
நெஞ்சப் புனத்து வஞ்சக்கட்டையை
வேரற வகழ்ந்து போக்கித் தூர்வைசெய்
தன்பென் பாத்தி கோலி முன்புற
மெய்யெனு மெருவை விரித்தாங் கையமில்
பத்தித் தனிவித் திட்டு நித்தலு
மார்வத் தெண்ணீர் பாய்ச்சிநேர் நின்று
தடுக்குநர்க் கடங்கா திடுக்கண் செய்யும்
பட்டியஞ் சினுக் கஞ்சியுட்சென்று
சாந்த வேலி கோலி வாய்ந்தபின்
ஞானப் பெருமுளை நந்தாது முளைத்துக்
கருணை யிளந்தளிர் காட்ட வருகாக்
காமக் குரோதக் களையறக் களைந்து
சேமப் படுத்துழிச் செம்மையி னோங்கி
மெய்ம்மயிர் புளக முகிழ்த்திட்டம்மெனக்
கண்ணீ ரரும்பிக் கடிமலர் மலர்ந்து
புண்ணிய
வஞ்செழுத் தருங்காய் தோன்றி நஞ்சுபொதி
காள கண்டமுங் கண்ணொருமூன்றுந்
தோளிரு நான்குஞ் சுடர்முக மைந்தும்
பவளநிறம் பெற்றுத் தவளநீறுபூசி
யறுசுவை யதனினு மாறுசுவை யுடைத்தாய்க்
காணினுங் கேட்பினுங் கருதினுங் களிதருஞ்
சேணுயர் மருத மாணிக்கத்தீங்கனி
பையப் பையப் பழுத்துக்கைவர
வெம்ம னோர்க ளினிதினி தருந்திச்
செம்மாந் திருப்பச் சிலரிதின் வாராது
மனமெனும் புனத்தை வறும் பாழாக்கி
[illegible]க்காடெழீஇத் தீமைசெய்

ஐம்புலவேட ராறலைத்தொழுக
வின்பப் பேய்த்தே ரெட்டா தேர்டக்
கல்லா வுணர்வெனும் புல்வா யலமர
விச்சைவித் துதிர்த்துழி.யானெனப் பெயரிய
கச்சு மாமர மனிமிக முளைத்துப்
பொய்யென் கவடுகள் போக்கிச் செய்யும்
பவப் பஃறழை பரப்பிப் பூவெனக்
கொடுமை யரும்பிக் கடுமை மலர்ந்து
துன்பப் பல்காய் தூக்கிப் பின்பு
மாணம் பழுத்து நரகிடை வீழ்ந்து
தமக்கும் பிறர்க்கு முதவா
திமைப்பிற் கழியு மியற்கையோ ருடைத்தே. (௧௦)

(நேரிசைவெண்பா.)

உடைமணியி னோசைக் கொதுங்கி யரவம்
படமொடுங்கப் பையவே சென்றங்—கிடைமருத
ளையம் புகுவ தணியிழையார் மேலனங்கன்
கையம் புக வேண்டிக் காலன். (௰௧)

(கட்டளைக்கலித்துறை.)

காணீர் கதியொன்றுங் கல்லீரெழுத்தஞ்சும் வல்லவண்ணம்
பேணீர் திருப்பணி பேசிரவன்புக ழாசைப்பட்டுப்
பூணீ ருருத்திர சாதனநீறெங்கும பூசுகிலீர்
வீணீ ரெளிதோ மருதப்பிரான்கழன் மேவுதற்கே. (௧௨)

(இணைக்குறளாசிரியப்பா.)

மேவிய புன்மயிர்த் தொகையோ வம்மயிர்
பாவிய தோலின் பரப்போ தோலிடைப்
புகவிட்டுப் பொதிந்த புண்ணோ புண்ணிடை
யூறு முதிரப் புனலோ கூறுசெய்
திடையிடை நிற்கு மெலும்போ வெலும்பிடை
முடைகெழு மூளை விழுதோ வழுவழுத்
துள்ளிடை யொழுகும் வழும்போ மெள்ளநின்
றூரும் புழுவி னொழுங்கோ நீரிடை
வைத்த மலத்தின் குவையோ வைத்துக்
கட்டிய நரம்பின் கன்றோ வுடம்பிற்குப்
பிரியா தொருக்கும் பிணியோ * தெரியா
தின்ன தியானென் றறியே னென்னை
யெங்குந் தேடினன் யாதிலுங் கண்டிலன்

* தெரிதரவெனவும்பாடம்.

முன்னம்
வரைத்தனி வில்லாற் புரத்தைய ழுரட்டிக்
கண் படை யாகக் காமனை யொருநா
ளுண்பொடி யாக நோக்கியன் றடத்து
வீயா வமரர் வீயவந் தெழுந்த
தீவாய் நஞ்சைத் திருவமு தாக்கி
யிருவர் தேடி வெருவா நிமிர்ந்து
காலனுக் காகக் காலனைக் காய்ந்து
கனக சரள சண்பக வகுள
கன வனத்திடை ஞாயிறு வழங்கா
நவமணி முகிழ்த்த புதுவெயி லெறிப்ப
வெண்ணருங் கோடி யிருடிகணங் கட்குப்
புண்ணியம் புரக்கும் பொன்னிசூழ்ந்த
திருவிடை மருத பொருவிடைப் பாக
மங்கை பங்க கங்கைநா யகநின்
றெய்வத் திருவருள் கைவந்து கிடைத்தலின்
மாயப் படலங் கீறித்தூய
ஞான நாட்டம் பெற்றனன் பெற்றபின்
னின்பெருந் தன்மையுங் கண்டேன் காண்டலு
மென்னையுங் கண்டேன் பிறரையுங் கண்டே
னின்னிலை யனைத்தினுங் கண்டே னென்னை
நின்னைக் காணு மாந்தர்
தன்னையுங் காணாத் தன்மை யோரே. (க௩)

(நேரிசைவெண்பா.)

ஓராதே யஞ்செழுத்து முன்னாதே பச்சிலையு
நேராதே நீரு நிரப்பாதே—யாராயோ
வெண்ணுவா ருள்ளத் திடைமருதர் பொற்பாத
நண்ணுவா மென்னு மதுநாம். (க௪)

(கட்டளைக்கலித்துறை.)

நாமே யிடையுள்ள வாறறிவாமினி நாங்கள்சொல்ல
லாமே மருதன் மருங்கனைத்தன்ன மன்னவனைப்
பூமேலணிந்து பிழைக்கச்செய் தாரொரு பொட்டுமிட்டார்
தாமே தளர்பவ ளைப்பாரமேற்றுத றக்கதன்றே. (க௫)

(நேரிசையாசிரியப்பா.)

அன்றினர்புரங்க ளழலிடை யவியக்
குன்றுவளைத் தெய்த குன்றாக் கொற்றத்து
நுண்பொடி யணிந்த வெண்டோட் செல்வ
கயிலைநடந் தனைய வுயர்நிலை தோன்றும்

பிறைசெறித் தன்ன விருகோட் டொருதிமிற்
பானிறச் செங்கண் மால்விடைப் பாக
சிமையச் செங்கோட் டிமயச் செல்வன்
மணியெனப் பெற்ற வணியிய லன்னம்
வெள்ளைச் சிறுநகைக் கிள்ளைப் பிள்ளை
குயிலெனப் பேசு மயிலிளம் பேடை
கதிரொளி நீலங் கமலத்து மலர்ந்தன
மதரரி நெடுங்கண் மானின் கன்று
வருமுலை தாங்குந் திருமார்பு வல்லி
வையமேழும வன்முறை யீன்ற
வைய திருவயிற் றம்மை பிராட்டி
மறப்பருஞ் செய்கை யறப்பெருஞ் செலவி
யெமையா ளுடைய வுமையா ணங்கை
கடவுட் கற்பின் மடவரல் கொழுந
பவள மாலவரைப் பனைக்கைபோன் றனைய
தழைசெவி யெண்டோட் டலைவன் றந்தை
பூவலர் குடுமிச் சேவலம் பதாகை
யலைதுளை படுத்த கொலைகெழு கூர்வே
லமரர்த் தாங்குங் குமரன் றாதை
பொருவிடங் கொண்டபொன் னிபுரக்கு
மருவிடங் கொண்ட மருதவாண
நினைது குற்ற முளதோ நின்னினைந்
தெவ்வணருங் கோடி யிடர்ப்பகை களைந்து
கண்ணூறு சிறந்துக் காலனை வதையா
திறப்பையும் பிறப்பையு மிகழ்ந்து சிறப்பொடு
தேவ ராவின் கன்றெனத் திரியாப்
பாவி டமதே பாவம் யாதெனின்
முறியர்ப் பெறுக்கன முப்பழுங் கலந்த
வறுசுவை யடிசி லட்டினி திருப்பப்
புசியா தொருவன் பசியால் வருந்துத
லயினியின் குற்ற மன்று வெயிலின்வைத்
தாற்றிய தெண்ணீர் நாற்றமிட் டிருப்ப
மடாது வொருவன் விடாது வேட்கை
தெண்ணீர்க் குற்ற மன்று கண்ணகன்று
தேன்றுளி சிதறிப் பூந்துணர் துறுமி
வாலுகங் கிடந்த சோலை கிடப்ப
வெள்ளிடை வெயிலிற் புள்ளிவெயர் பொடிப்ப
வடிபெயர்த் திடுவா னொருவ
னெடிது வருந்துத னிழற்றீங் கன்றே (௧௫)

(நேரிசைவெண்பா.)

அன்றென்று மாமென் றாறுசம யங்க
ளொன்றொன்றொ டொவ்வா துரைத்தாலு—மென்று
மொருதனையே நோக்குவா ருள்ளத் திருக்கு
மருதனையே நோக்கி வரும்.

(கட்டளைக்கலித்துறை.)

நோக்கிற்றுக் காம னுடல்பொடி யாக நுதிவிரலாற்
றாக்கிற்ற ரக்கன் றலைகீழ்ப் படத்தன் சுடாவடிவா
ளோக்கிற்று தக்கன் றலையுருண் டோடச் சலந்தரனைப்
போக்கிற் றுயிர்பொன்னி சூழ்மரு தாளுடைப் புண்ணியமே.

(நேரிசையாசிரியப்பா.)

புண்ணிய புராதன புதுப்பூங் கொன்றைக்
கண்ணி வேய்ந்த கைலை நாயக
கால கண்ட கந்தனைப் பயந்த
வாளரி நெடுங்கண் மலையாள் கொழுந
பூத நாத பொருவிடைப் பாக
வேத கீத விண்ணோர் தலைவ
முத்தி நாயக மூவா முதல்வ
பத்தி யாகிப் பணைத்தமெய் யன்பொடு
நொச்சி யாயினுக் கரந்தை யாயினும்
பச்சிலை யிட்டுப் பரவுந் தொண்டர்
கருவிடைப் புகாமற் காத்தருள் புரியுந்
திருவிடை மருத திரிபு ராந்தக
மலர்தலை யுலகத்துப் பலபல மாக்கண்
மக்களை மனைவியை யொக்கலை யொரீஇ
மனையும் பிறவுந் துறந்து நினைவருங்
காடு மலையும் புக்குக் கோடையிற்
கைம்மே னிமிர்த்துக் காலொன்று முடக்கி
யைவகை நெருப்பி னழுவத்து நின்று
மாரி நாளினும் வார்பனி நாளினு
நீரிடை மூழ்கி நெடிது கிடந்துஞ்
சடையைப் புனைந்துந் தலையைப் பறித்து
முடையைத் துறந்து முண்ணா துழன்றுங்
காயுங் கிழங்குங் காற்றுதிர் சருகும்
வாயுவு நீரும் வந்தன வருந்தியுங்
கரிலுங் கல்லினுங் கண்படை கொண்டுந்
தளர்வுறு மியாக்கையைத் தளர்வித் தாங்கவ
ரும்மை முத்தி யடைவதற் காகத்

தம்மைத் தாமே சாலவு மொறுப்ப
நீங்கிவை செய்யா தியாங்க ளெல்லாம்
பழுதின் றுயர்ந்த வெழுநிலைமாடத்துஞ்
செந்தா துதிர்ந்த நந்தா வனத்துந்
தென்ற லியங்கு முன்றி லகத்துந்
தண்டாச் சித்திர மண்டப மருங்கிலும்
பூவிரி தரங்க வாவிக் கரையிலு
மயிற் பெடையாலக் குயிற்றிய குன்றிலும்
வேண்டிழி வேண்டிழி யாண்டாண்டிட்ட
மருப்பி.னியன்ற வாளரி சுமந்த
விருப்புறு கட்டின் மீமிசைப் படுத்த
வைவகை யமளி யணைமேற்பொங்கத்
தண்மலர் கமழும் வெண்மடி விரித்துப்
பட்டினுட் டெய்த பதனுண் பஞ்சி
னெட்டணை யருகாக்கொட்டைகள் பரப்பிப்
பாயன் மீது பரிபுற மிழற்றச்
சாயலன் னத்தின் றளர்நடை பயிற்றிய
பொற்சீறு ரனைத்தைச் சுற்றிய துகிலெண
வம்மென் குறங்கி னெய்மென் கலிங்கங்
கண்ணுறு மனமுங் கவற்றிப் பண்வர
விரங்குமணி மேகலை பொருங்குடன் கிடந்த
வாடர வல்குலம்பெற னுசுப்பு
வாட வீங்கிய வனமுலை கதிப்ப
வணியியல் கமுகை யலங்கரித் ததுபோன்
மணியிய லாரங் கதிர்விரித் தொளிர்தர
மணிவளை தாங்கு மணிகெழு மென்றோள்
விரித்த சாந்தின் மிசைவிரித் திட்ட
வுரித்த யப்பட் டொருபா லொளிதர
வள்ளைவாட்டிய வொள்ளிரு காதொடு
பவளத் தருகாத் தரள நிரைத்தாங்
கொழுகி நீண்ட குமிழொன் றுபதித்துக்
காலன் வெலுங் காம பாணமு
மால காலமு மனைத்துமிட் டமைத்த
விரண்டு நாட்டமும் புரண்டுகடை குளிர்தர
மதியெனமாசறு வதனம்விளங்கப்
புதுவிரை யலங்கல் குழன்மிசைப் பொலியு
மஞ்சொன் மடந்தைய ராகந் தோய்ந்துஞ்
சின்னம் பரப்பிய பொன்னின் கலத்து

மறுசுவை யடிசில்வறி திருந் தருந்தா
யாடினர்க் கென்றும் பாடினர்க் கென்றும்
வாடினர்க் கென்றும் வரையாது கொடுத்துப்
பூசுவன பூசியும் புனைவன புனைந்துந்
தூசி னல்லன தொடையிற் சேர்த்தியு
மைந்து புலன்களு மார வார்ந்து
மைந்தரு மொக்கலு மனமகிழ்ந் தோங்கி
யிவ்வகை யிருந்தோ மாயினு மவ்வகை
மந்திர வெழுத் தைந்தும் வாயிடை மறவாது
சிந்தை நின்வழி செலுத்தலி னாகத
முத்தியு மிழந்தில முதலவ வத்திற
மின்னது பெருமை யன்றோ வென்னெனின்
வல்லா னொருவன் கைம்முயன் றெறியினு
மாட்டா வொருவன் வாளா வெறியினு
நிலத்தின் வழாஅக் கல்லே போ
னலத்தின் வழார்நின் னுமநவின் றோரே. (௧௯)

(நேரிசைவெண்பா.)

காமனவிற் றுய்மனனே நாரியர்கடோ டோய்ந்து
காமனவிற் றிக கழிந் தொழிய—லாமோ
பொருத வனத்தானையுரிபோர்த்தருளு மெங்கண்
மருத வனத் தானை வளைந்து. (௨௦)

(கட்டளைக்கலித்துறை.)

வளையார்பசியின் வருந்தார் பிணியின் மதனனம்புக்
கிளையார்தனங்கண் டிரங்கிநில் லாரிப பிறப்பிலிலவந்
தளையார்கரனுக் கென்கடவார்பொன் னலாநதகொனறைத்
தளையாரிடைமரு தன்னடி யாரடி சார்ந்தவரே. (௨௧)

(நேரிசையாசிரியப்பா.)

அடிசார்ந் தவர்க்கு முடியா வின்ப
நிறையக் கொடுப்பினுங் குறையாச் செல்வ
மூலமு நடுவு முடிவு மின்றிக்
காலமூன் றுங் கடந்த கடவு
ளுளக்கணுக் கல்லா தூன்கணுக் கொளித்துத்
துளக்கற நிமிர்ந்த சோதிச் சுடரொளி
யெறுப்புத் தவாயி னிருசெவிக் கெட்டா
துறுப்பினின் றெழுதரு முள்ளத் தோசை
வைத்த னாவின் வழியுறீத் தக்கதே
தித்தித் தாங்கி தெய்வத் தேற

றுண்டத் துளையிற் பண்டைவழி யன்றி
யறிவே றறிகுறிய நாற்ற
மேனிலை தன்மையு மெய்தா தெவற்றையுந்
தானே யாகி நின்ற தற்பரத்
தோற்றுவ தெல்லாந் தன்னிலைத் தோற்றித்
தோற்றம் பிறிதிற் றோற்றாச் சுடர்முளை
விரிசடை மீமிசை வெண்மதி கிடப்பினு
மிருள்புரை கண்டத் தேக நாயக
சுருதியு மிருவருந் தொடர்ந்து நின்றலமர
மருதிடங் கொண்ட மருத மாணிக்க
வுமையாள் கொழுந வொருமூன் றாகிய
விமையா நாட்டத் தென்றனி நாயக
வடியே னுனது குறைமுனியா துகேண்மதி
நின்னடி பணியாக் கன்மனக் கயவரொடு
நெடுநாட் பழகிய கொடுவினை யீர்ப்பக்
கருப்பா சயமெனு மிருட்சிறை யறையிற்
குடரெனுஞ் சங்கிலி பூண்டு தொடர்பட்டுக்
கூட்டுச் சிறைப் புழுவி னிட்டுமலத் தழுந்தி
யுடனே வருந்தி நெடுநாட் கிடந்து
பல்பிணி பெயர்பெற் றல்லற் படுத்துந்
தண்டலாளர் மிசைவந் தலைப்ப
வுதரநெருப்பிற் பதைபதை பதைத்தும்
வாதமத் திசையின் மோதமோத் துண்டுக்
கிடத்தலிற்ற னடத்தல் செல்லா
திடக்குறை வாயிலின் முடங்கி யிருந்துழிப்
பாவப் பகுதியி லிட்டுக் காவற்
கொடியோ னாவலா யேவி நெடிய
வாசைத் தளையி லென்னையு முடலையும்
பாசப் படுத்திப் பையென விட்டபின்
யானும் போந்து திரிதருஞ் சுழன்று
பெரியோர்ப் பிழைத்தும் பிறர்பொருள் வெளவியும்
பரியா தொழிந்தும் பல்லுயிர் செகுத்தும்
வேற்றோர் மனைவியர் தோற்றம் புகழ்ந்தும்
பொய்பல கூறியும் புல்லினம் புல்லியு
மைவருங் கடுப்ப வவாவது கூட்டி
நீண்டன கொண்டு மீண்டு வந்துழி
யிட்டுழி யிடாது பட்டுருப் படாது
இன்னா விடுக்க ணெய்திப் பன்னாள்

வாய்ப்பு கிடப்பேன் வீசி நெறிகாளே
னின்னை யடைந்த வடியா ரடியார்க்
கென்னையு மடிமை யாகக் கொண்டே
யிட்ட பச்சிலைகொண் டொட்டி யறிவித்
திச்சிறை பிழைப்பித்தி னிச்சிறை புகாமற்
காத்தருள் செய்யவேண்டுந்
தீத்திரண் டன்ன செஞ்சடை யோனே. (உ௨)

(நேரிசைவெண்பா.)

சடைமே லொருத்தி சமைந்திருப்ப மேனிப்
புடைமே லொருத்தி பொலிய—விடையேபோய்
சங்கே கலையே மருதற்குத் தான்கொடுப்ப
தெங்கே யிருக்க விவள். (உ௩)

(கட்டளைக்கலித்துறை.)

இருக்கு மருதினுக் குள்ளிமையோர்களு நான்மறையு
நெருக்கு நெருக்கத்து நீளகத்துச்சென்று நீளவொட்டாத்
திருக்குமறுத்தைவர் தீமையுந் தீர்த்துச்செவ் வேமனத்தை
யொருக்குமொருக்கத்தி லுள்ளே முளைக்கின்ற வொண்சுடரே

(நேரிசையாசிரியப்பா.)

சுடர்விடு சூலப் படையினை யென்றும்
விடையுகந் தேறிய விமல வென்று
முண்ணு நஞ்ச முண்டனை யென்றுங்
கண்ணுற காமனைக் காய்ந்தனை யென்றுந்
திரிபுர மெரித்த சேவக வென்றுங்
கரியுரி போர்த்த கடவு ளென்று
முரகம் மண்ட வுரவோ யென்றுஞ்
சிரகஞ் செந்தழ லேந்தினை யென்றும்
வலந்தரு காலனை வதைத்தனை யொன்றுஞ்
சலந்தர னுடலந் தடிந்தனை யென்று
மயன்சிர மொருநா ளரிந்தனை யென்றும்
வியந்தவா ளரக்கனை மிதித்தனை யென்றுந்
தக்கன் வேள்வி தகர்த்தனை யென்று
முக்கிரப் புலியுரி யுடுத்தனை யென்று
மேனமு மன்னமு மெட்டா தலமா
வானங் கீழ்ப்பட வளர்ந்தனை யென்றுஞ்
செழுநீர் ஞாலஞ் செகுத்துயி ருண்ணு
மழல்விழிக் குறளை யமுக்கினை யென்று
மினையன வினையன வெண்ணில் கோடி
நினைவருங் கீர்த்தி நின்வயிற் புகழ்ந்த

றனக்குறு சிந்தையேன் சொல்லவ னாதலி
னளப்பரும் பெருமையி னளவில தாயினு
மொன்றி னேயாப் புன்மொழி கொண்டு
நின்னை நோக்குவ னாதலி னென்னை
யிகழ்வன் களையா வல்லற் படுத்தா
தெழுநிலை மாடத்துச் செழுமுகி லுறங்க
வடித்துத் தட்டி யெழுப்புவ போல
நுண்டுகிற் பதாகை கொண்டு கொண்டசைப்பத்
துயிலி னீங்கிப் பயிலும் வீங்கித்
திருமரு தமர்ந்த தெய்வச் செழுஞ்சுட
ரருள்சுரந் தளிக்கு மற்புதக் கூத்த
கல்வி னெறிந்த பொல்லாப் புத்த
னின் னினைந் தெறிந்த வதனு
லன்னவன் றனக்கு மருள்பிறழத் தின்றே. (௨௫)

(நேரிசை வெண்பா.)

இன்றிருந்து நாளை யிறக்குந் தொழிலுடைய
புன்றலைய மாக்கள் புகழ்வரோ-வென்றிமழு
வாளுடையான் றெய்வ மருதுடையா னுமையேனை
யாளுடையான் செம்பொ னடி. (௨௬)

(கட்டளைக்கலித்துறை.)

அடியாயிரந்தொழி லாயிரவாயிர மாயிரம் பேர்
முடியா யிரங்கண் கண்மூவாயிரமூற்று நீறணிந்த
தொடியா யிரங்கொண்ட தோளிரண்டாயிர மென்றுநெஞ்சே
படியாயிராப்பகற் றென்மருதாளியைப் பற்றிக் கொண்டே.

(இணைக்குறளாசிரியப்பா.)

கொண்டலி னிருண்ட கண்டத் தெண்டோட்
செவ்வா னுருவிற் பையர வார்த்துச்
சிறுபிறை கிடந்த நெறிதரு புன்சடை
மூவா முதல்வ முக்கட் செல்வ
தேவ தேவ திருவிடை மருத
மாசறு சிறப்பின் வானவ ராடும்
பூசத் தீர்த்தம் புரக்கும் பொன்னி
யயிரா வணத்துறை யாடு மப்ப
கைலாய வரை கௌரி நாயக
நின்னருள் சுரந்து பொன்னடி பணிந்து
பெரும்பதம் பிழையா ரம்பலபெற்றோ
ரிமையா நெடுங்க ணுமையா ளங்கையு

மழைக்கட் டடத்துப் புழைக்கைப் பிள்ளையு
மமரர்த் தாங்கும் குமர வேளுந்
சுரிசங் கேந்திய திருநெடு மாலும்
வான்முறை படைத்த நான்முகத் தொருவனுந்
தாருகற் செற்ற வீரக் கன்னியும்
பூவின் கிழத்தியு நாவின் மடந்தையும்
பீடுயர் தோற்றத்துக் கோடி யுருத்திரரு
மாறைப் பெருந்திறல் வானோர் தலைவனுஞ்
செயிர்தீர் நாற்கோட் டயிரா வதமும்
வாம்பரி யருக்கர் தாம்பன் னிருவருஞ்
சந்திர னொருவனுஞ் செந்திக் கடவுளு
நிருதியுஞ் சமனுஞ் சுருதிக ளுன்கும்
வருணனும் வாயுவு மிருநிதிக் கிழவனு
மெட்டு நாகமு மட்ட வசுக்களு
மூன்றுகோடி யான்ற முனி வரும்
வசிட்டனுங் கபிலனு மகத்தியன் றானும்
தும்புரு நாரத னென்றிரு திறத்தரும்
வித்தகப் பாடன் முத்திறத் தடியருந்
திருந்திய வன்பின் பெருந்துறைப் பிள்ளையு
மத்தகு செல்வத் தவமுதித் தருளிய
சித்த மார்சிவ வாக்கியதேவரும்
வெள்ளை நீறு மெய்யிற் கண்டு
கள்ளன் கையிற் கட்டவிழ்ப் பித்து
மோடும் பன்னரி யூளைகேட் டரனைப்
பாடின வென்று படாம்பல வளித்துங்
குவளைப் புனலிற் றவளை யரற்ற
வீசன் றன்னை யேத்தின வென்று
காசும் பொன்னுங் கலந்து தூவியும்
வழிபடு மொருவன் மஞ்சனத் தியற்றிய
செழுவிரையெள்ளைத்தின்னக்கண்டு
பிடித்தலு மவனிப் பிறப்புக் கென்ன
விடித்துக் கொண்டவ னெச்சிலை நுகர்ந்து
மருத வட்டத் தொருதனிக் கிடந்த
தலையைக் கண்டு தலையுற வணங்கி
யும்மைப் போல வெம்மித் தலையுங்
கிடக்கவேண்டுமென்றடுத்தடுத்திரந்துங்
கோயின் முற்றத்து மீமிசைக்கிடப்ப
வார்த்த தென்று நாய்க்கட் டெடுத்துங்

காம்பவிழ்த் துதிர்ந்த கனியுருக் கண்டு
வேம்புகட் கெல்லாம் விதான மளித்தும்
விரும்பின கொடுக்கை பரம்பரற் கென்று
புரிகுழற் றேவியைப் பரிவுடன் கொடுத்த
பெரிய வன்பின் வரகுண தேவரு
மினைய தன்மைய ரெண்ணிறந் தோர்க
ளனைவரு நிற்க யானு மொருவன்
பத்தி யென்பதோர் பாடு மின்றிச்
சுத்த னாயினுந் தோன்றாக் கடையே
னின்னை
யிறைஞ்சில னாயினு மேத்தில னாயினும்
வருந்தில னாயினும் வாழ்த்தில னாயினுங்
கருதி யிருப்பன் கண்டாய்பெரும
நின்னுல கனைத்து நன்மை தீமை
யானவை நின்செய லாதலி
னானே யமையு நலமில் வழிக்கே. (௨௮)

(நேரிசைவெண்பா.)

வழிபிழைத்து நாமெல்லாம் வந்தவாசெய்து
பழிபிழைத்த பாவங்க ளெல்லாம்—பொழில்சூழ்
மருதிடத்தா னென்றொருகால் வாய்கூப்ப வேண்டா
கருதிடத்தா னில்லா கரந்து. (௨௯)

(கட்டளைக்கலித்துறை.)

கரத்தினன் மாலவன் கண்கொண்டுநின்கழல் போற்றநல்ல
வரத்தினையீயு மருதவப்பாமதி யொன்றுமிலலேன்
சிரத்திலு மாயென்றன் சிந்தையுளாகிவெண் காடனென்னுந்
தரத்திலுமாயது நின்னடியாந் தெய்வத் தாமரையே. (௩௦)

திருச்சிற்றம்பலம்.



திருவிடைமருதூர் - மும்மணிக்கோவை.

முற்றிற்று.



கணபதிதுணை.

திருச்சிற்றம்பலம்.

பதினொன்றாந்திருமுறையுள்

திருவெண்காடரென்னும்

## பட்டணத்துப்பிள்ளையார் அருளிச்செய்த

மூன்றாவது

திருக்கழுமல

# மும்மணிக்கோவை

திருச்சிற்றம்பலம்

(இணைக்குறளாசிரியப்பா.)

திருவளர்பவளப் பெருவரைமணந்த
மரகதவல்லி போலொருகூறின்
இமயச்செல்வி பிரியாதுவிளங்கப்
பாய்திரைப்பரவை மீமிசைமுகிழ்த்த
அலைகதிர்ப்பரிதி யாயிரந்தொகுத்த
வரன்முறைதிரியாது மலர்மிசையிருந்தெனக்
கதிர்விடுநின்முகங் காண்டொறுங்காண்டொறும்
முதிராவிளமுலை முற்றாக்கொழுநதின்
திருமுகத்தாமரைச் செவ்வியின்மலர்நின்
றையல்வாணுதற் றெய்வச்சிறுபிறை
இளநிலாக்காண்டொறு மொளியொடும்புணர்ந்துநின்
செவ்வாய்க்குமுதஞ் செவ்விசெய்யநின்
செங்கைக்கமல மங்கைவனமுலை
அமிர்தகலச மமைவினைக்க
மலைமகட்டுறந்து நயனக்குவளைநின்
பொலிவினொடுமலர மறையோர்கழுமல
நெறிநின்றுபொலிய நாகர்நாடு
மீமிசையிதந்து மீமிசையுலகம்
கீழ்முதற்றாழ்ந்து
ஒன்றுவந்த குன்றுவெள்ளத்
துலகமூன்றுக்குங் களைகணாகி

முதலிற்கால மிஸிதுவிற்றிருக் தூர்த்
தாதையாபுவேந்த வேதியச்சிறுவன்
தளர்நடைப்பருவத்து வளர்பசிவருந்த
அன்றுயோவென் றழைப்பமுன்னின்று
ஞானபோனகத்தரு ளட்டிக்குழைந்த
ஆறுத்திரலை யவன்வயினருள
அந்தணன்முனிந்து தந்தாரியாரென
அவனைக்காட்டுவ னப்பவானுர்
தோடுடையசெவியனென்றும்
பீடுடைய பெம்மானென்றும்
கையிற் சுட்டிக்காட்ட
ஐயநீவெளிப்பட் டருளினையாங்கே, (க)

(வெண்பா.)

அருளின்கட்டலடியே னன்பென்னுமாறு
பொருளின்றிரள்புகலிநாதன்—இருளபுகுறுங்
கண்டத்தானென்பானைக் காதலித்துக்கைதொழுவார்
அண்டத்தார்தாமா ரதற்கு. • (உ)

(கட்டளைக்கலித்துறை.)

ஆரணநான்கிற்கு மப்பால்வனறி யத்துணிந்த
நாரணனுன்முக னுக்கரியானடு வாயநிறைந்த
பூரணனெந்தை புகலிப்பிரான் பொழிலத்தனைக்கும்
காரணனந்தக் காலங்கடந்த கருப்பொருளே, (௩)

(இணைக்குறளாசிரியப்பா.)

கருமுதற்றொடங்கிப் பெருநாளெல்லாம்
காமம்வெகுளிகழிபெருமபொய்யெனும்
தூய்மையில்குப்பை தொலைவின்றிற்கிடந்ததை
அரிதினிகழ்ந்து போக்கிப்பொருதிறன
மையிருணிறத்து மதமுதையடுசினத
தைவகைக்கடாவும் யாப்பவிழ்த்தகற்றி
அன்புகொடுமெழுகி யருள்விளக்கேற்றித்
துன்பவிருளைத் துறந்துமுன்புற
மெய்யெனும்விதானம் விரித்துநொய்ய
கீழ்மையிற்றொடர்ந்து கிடந்தவென்சிந்தைப்
பாழறையுனக்குப் பள்ளியறையாதகிச்
சிந்தைத்தாமரைச் செழுமலர்ப்பூந்தவி
செந்தநீயிருக்க விட்டனனிந்த

தேவிலவர்க்கு மடங்கிர்வானமும்
அடைப்பர்த்த வாதிவெள்ளந்து
நுரையெனச்சிதறி யிருடீர்யிடும்ப
வளைபறித்தியங்கு மாருதங்கடும்பா
மாலும்பிரமனு முதலியபலவர்
காலமிதுவெனக் கலங்காநின்றுழி
மற்றவருய்யப் பற்றியபுணையாய்
மிகவளிமிதந்த புகலிநாயக
அருணனிசுரக்கும் பிரளயவிடங்கநின்
செல்வச்சிலம்பு மெலமெலனயிழற்ற
அலமையாக்காட்சி யிமயக்
கொழுந்தையுமுடனே கொண்டிங்
கெழுந்தருளததகு மெமபெருமானே

(வெணபா)

மாலுமழுவுந் திருமிடற்றில் வாழுமிரு
டாலுமபிறையுமே தாஙகிநிற்கும—வானவர்க்கு
வெள்ளத்தேதோன்றிக் கழுமலத்தேவீற்றிருநதென்
உள்ளத்தேநின்ற வொளி, (௫)

(கட்டளைக்கலித்துறை.)

ஒளிவந்தவாபொய்மனத்திருணீங்கவென்னுள்ளவெள்ளம்
தெளிவந்தவாவநதுதித்திடத்தவாசிநதியாதவொரு
களிவந்தவாவன்புகைவநதவாகடைசாரமையத்
தெளிவந்தவாநகண்கழுமலவாணர்தமமின்னருளே.

(இணைக்குறளாசிரியப்பா.)

அருள்பழுத்தளிந்த கருணைவான்கனி
ஆராவின்பத் தீராக்காதல
அடியவர்ககமிாத வாரிநெடுநிலை
மாடக்கோபுரத் தாடகக்குடுமி
கழைவளர்துகிழ்க்கு கழுமலவாணநின்
வழுவாக்காட்சி முதிராவிளமுலைப்
பாவையுடனிருநத பரமயோகி
யாரெனறுணர்த்துவ னெநதையேனுன்
ஆகிலலோகமு மனநதயோனியும்
நிகிலமுந்தோன்றநீ நினைநதகாடொடங்கி
எனைப்பலயோனி யுநினைப்பருமபேதத்
தியாரும்யாவைபு மெனககுத்தனித்தனித்
தாயாகியுந் தந்தையாகியும்
வந்திலாதவ ரில்லையானவர்

தந்தையாகியுந் தாயாகியும்
வந்திராதது மில்லைமுந்து
பிறவாகிலது மில்லையவ்வயின்
இறவாகிலது மில்லைபிறிதில்
எனைத்தின்னுயிர்களு மில்லையானவை
தமைத்தின்றொழிந்தது மில்லையனைத்தே
காலமுஞ்சென்றதியாநிதன்மேலினி
இனைக்குமா றிலனேநாயேன்
அந்தரச்சோதியி னஞ்செழுத்தாகவிலும்
தந்திரமயின்றது மிலனெதந்திரம்
பயின்றவர்ப்பயினறது மிலனேயாயினும்
இயன்றதோர்பொழுதி னிட்டதுமலராச்
சொன்னதுமந்திர மாகவெனையும
இடர்பிறபிறப்பெனு மிரண்டின்
கடம்படாவகை காத்தநின்கடனே. (எ)

(வெண்பா.)

கடலானகாமத்தே காழ்வர்துன்பம்
அடலாமுபாயமறியார்—உடலாம
முழுமலத்தையோர்கிலார் முக்கட்பெருமான்
கழுமலத்தைக் கைதொழாதார். (அ)

(கட்டளைக்கலித்துறை.)

தொழுவாளிவளவளதோற்பாளிவளிடர்க்கேயலர்கொள்
டெழுவாளெழுகினறதென்செயவோவென்மனத்திருந்துங்
கழுவாமணியைக்கழுமலவாணனைக்கையினிற்கொள்
மழுவாளனைக்கன்டுவந்ததெனாலோர்வசையிலலையே. (கூ)

(இணைக்குறளாசிரியப்பா.)

வசையில்காட்சி யிசைநனிவிளங்க
மூன்றுணிகழந்த பன்னிருகத்து
வேறுவேறுபெயரிய ஹூறின்றியன்ற
மையறுசிறப்பிற றெய்வத்தன்மைப்
புகலிநாயக வியலவிடைபபாக்
அமைகாண்மென்றே ளுமையாள்கொழுந
குன்றுகுனிவித்து வன்றோளவுணர்
மூவெயிலெரித்த சேவகத்தேவ
இளநிலாமுகிழ்க்கும வளர்சடைகடவுணின்
நெற்றியிற்சிறந்த வொற்றைநாட்டத்துக்
கன்னலைவிழித்த முதமுதலைவ

வெவ்வாறியா வாறிப்போல
கல்லாவுடம்பிற் புல்லறிவுதொடர
மறந்துநினைக்கும் வெறுந்தன்றாட்டித்துக்
கண்டொறுங்காண்டொறு மென்னரியாண்மைப்
பாயினும்பிறவு மென்னையும்பிறரையும்
ஆவனபலவு மழிவனபலவும்
போவதும்வருவது நிகழ்வதுமாகித்
தெண்ணீர்ஞாலத்துத் திரண்டமணலினும்
எண்ணில்கோடி யெனைப்பலவாகி
இல்லனவுளவா யுள்ளனகாணுப்
பன்னாளிருள்வயிற் பட்டேனன்னதும்
அன்னதாதவி னடுக்குமதென்னெனின்
கட்புலன்றெரியாது கெர்ட்புறுமொருவற்குக்
குழிவழியாகி வழிகுழியாகி
ஒழிவின்றொன்றி னொன்றுதடுமாறி
வந்தாற்போல வந்ததுபோல
எந்தைநின்
திருவளர்காட்டங் கருணையிற்பெறலும்
யாவையுமெனக்குப் பொய்யெனத்தோன்றி
மேவருநீயே மெய்யெனத்தோன்றினை
ஓவியப்புலவன் சாயல்பெறவெழுதிய
சிற்பவிகற்ப மெல்லாமொன்றில
தவிராதுதடவினர் தமக்குச்
சுவராய்த்தோன்றுந் துணிவுபோன்றனவே. (௧௦)

(வெண்பா.)

எனவேயெழுந்தாளெர் செய்கிற்பாளின்னஞ்
சினவேறுகாட்டு திறொன்று—மினவேகப்
பாம்புகளியாகிமிரும் பன்னுச்சடைமுடிநம்
பூம்புகலியாளிதழிப் போது. (௧௧)

(கட்டளைக்கலித்துறை.)

போதும்பெறாவிடிற் பச்சிலையுண்டுபுனலுண்டெங்கும்
ஏதும்பெறாவிடினெஞ்சுண்டன்றேயினியாகச்செய்யும்
சூதும்பெறாமலைப்பங்கர்தென்றோணிபுரேசர்வண்டின்
தாதும்பெறாதவடித்தாமரைசென்றுசார்வதற்கே. (௧௨)

திருச்சிற்றம்பலம்.

* மும்மணிக்கோவை
முற்றிற்று.

உ

கணபதிதுணை.

திருச்சிற்றம்பலம்.

பதினொன்றாந்திருமுறையுள்

திருவெண்காடரென்னும்

பட்டணத்துப்பிள்ளையார் அருளிச்செய்த

நான்காவது

# திருவொற்றியூர்த்

## திருக்குறுந்தொகை.



திருச்சிற்றம்பலம்.

ஆசிரியப்பா.

இருநிலமடந்தை யியல்பினினுடுத்த
பொருகடன்மேகலை முகமெனப்பொலிந்த
ஒற்றிமாநக ருடையோயுருவின்
பெற்றியொன்றறப் பெற்றோரியாரே
மின்னினியலின பிறங்குறுஞ்சடையே
மன்னியவண்டநின் சென்னியின்வடிவே
பாவகன்பரிதி பனிமதிதன்னொடு
மூவகைச்சுடருநின் னுதனேர்நாட்டம்
தணவொளியாரந் தாராகணமே
விண்ணவர்முதலா வேறோரிடமாக்
கொண்டுறைவிசும்பே கோலநின்னகம்
எண்டிசைதிண்டோ ளிருங்கடலுடையே
அணியுடையல்குலு மவனிமண்டலமே
மணிமுடிப்பாந்தணின்றாளிணைவழக்கே
ஒழியாதோடியமாருதமுயிர்ப்பே
வழுவாவோசை முழுதுநின்வாய்மொழி
வானவர்முதலா மன்னுயிர்பரந்த
ஊனமின்ஞானத் தொகுதிநின்னுணர்வே
ஒருங்கியவுலகினி னீர்மையுநிற்றலும்
சுருங்கலும்விரிதலுந் தோற்றநிற்றொழிலே
அமைத்தலுமழித்தலு மாங்கதன்முயற்சியும்
இமைத்தலுமவிழ்த்தலு மாகுநின்னியல்பே
என்றிவைமுதலா வியல்புடைவடிவினோ
டொன்றியதுப்புரு விருவகையாகி

முத்திறக்குணத்து நால்வகைப்பிறவி
அத்திறத்தைம்பொறி யறுவகைச்சமயமோ
டேழுலகாகி யெண்வகைமூர்த்தியோ
டூழிதோறூழி யெண்ணிறந்தோங்கி
எவ்வகையளவினிற் கூடிநின்
றிவ்வகைப்பொருளுநீ யாகியவிடத்தே. (௧)
இடத்துறைமாதரோ டொருடம்பென்றும்
கடத்தினைநள்ளிரு ளவிற்றினையென்றும்
புலியதளென்பொடு புனைந்தோயென்றும்
பலிதிரிவாழ்க்கை பயின்றோயென்றும்
திருவமர்மாலொடு திசைமுகனென்றும்
அருவமுமுருவமு மானோயென்றும்
உளனேயென்று மிலனேயென்றும்
தளராவென்றுந் தளர்வோனென்றும்
ஆதியென்றும் சோதியனென்றும்
போதியிற்பொலிந்த புராணனென்றும்
இன்னவைமுதலாத் தாமறியளவையின்
மன்னியநூலுடன் பன்மையுண்மயங்கிப்
பிணங்குமாந்தர் பெற்றிமைநோக்கி
அணங்கியவ்வவர்க்கவ் வவையாகியடை
பற்றிய பளிங்குபோலும்
ஒற்றிமாநகருடை யோயுருவே. (௨)
உருவாமுலகுக் கொருவனாகிய
பெரியோய்வடிவின் பிறிதிங்கின்மையின்
எப்பொருளாயினு மிங்குளதாமெனின்
அப்பொருளுனக்கே யவயவமாதலின்
முன்னியமூவெயின் முழுங்கெரியூட்டித்
தொன்னீர்வையகந் துயர்கெடச்சூழ்ந்ததுந்
வேள்விமூர்த்திதன் றலையினைவிடுத்ததும்
நீள்விசும்பாளிதன் றோளினைநெரித்ததும்
ஓங்கியமறையோற் கொருமுகமொழித்ததும்
பூங்கணைவேளைப் பொடிபடவிழித்ததும்
திறல்கெடவரக்கனைத் திருவிரலுறுத்ததும்
குறைபடக்கூற்றினைக் குறிப்பினிலடர்த்ததும்
என்றிவைமுதலா வாள்வினையெல்லாம்
நின்றுழிச்செறிந்தவை நின்செயலாதலின்
உலவாத்தொல்புக ழொற்றியூரா
பகர்வோர்நினக்கு வேறின்மைகண்டவர்

நிகழ்ச்சியினிகழி னல்லது
புகழ்ச்சியிற்படுப்பரோ பொருளுணர்ந்தோரே. (௩)
பொருளுணர்ந்தோங்கிய பூமகன்முதலா
இருவினையாக்கையி லியங்குமன்னுயிர்
உருவினுமுணர்வினு முயர்வினும்பணியினும்
திருவினுந்திறலினுஞ் செய்தொழில்வகையினும்
வெவ்வேறாகி வினையொடும்பிரியா
தொவ்வாப்பன்மையுள் மற்றவரொழுக்கம்
மன்னியவேலையுள் வான்றிரைபோல
நின்னிடையெழுந்து நின்னிடையாகியும்
பெருகியுஞ்சுருங்கியும் பெயர்ந்துந்தோன்றியும்
விரவியும்வேறாய் நின்றனைவிளக்கம்
ஓவாத்தொல்புக ழொற்றியூர
மூவாமேனி முதல்வநின்னருள்
பெற்றவரறியி னல்லது
மற்றவரறிவரோ நின்னிடைமயக்கே. (௪)
மயக்கமில்சொன்னீ யாயினுமற்றவை
துயக்கநின்றிற மறியாச்சூழலும்
உறையிடமுள்ள மாயினுமற்றது
கறைபடவாங்கே கரந்தகள்ளமும்
செய்வினையுலகினிற் செய்வோயெனினும்
அவ்வினைப்பயனீ யணுகாவண்மையும்
இனத்திடையின்பம் வேண்டிநிற்பணிவோர்
மனத்திடைவாரி யாகியவனப்பும்
அன்பினடைந்தவர்க் கணிமையுமல்லவர்ச்
சேய்மையு நாடோறும்
என்பினையுருக்கு மியற்கையவாதலில்
கண்டவர்தமக்கே யூனுடலழிதல்
உண்டெனவுணர்ந்தன மொற்றியூர
மன்னியபெரும்புகழ் மாதவத
துன்னியசெஞ்சடைத் தூமதியோயே. (௫)
தூமதிசடைமிசைச் சூடுதறுநெறி
ஆமதியானென வமைத்தவாறே
அறனுருவாகிய வானேறேறுதல
இறைவனியானென வியற்றுமாறே
அதுவலவளவென நின்றமையார்க்கும்
பொதுநிலையானென வுணர்த்தியபொருளே
முக்கணனென்பது முத்தீவேள்வியில்

தொக்கதென்னிடை யென்பதோர்சுருக்கே
வேதமான்மறி யேந்துதன்மற்றதன்
நாதனெனை நவிற்றுமாறே
மூவிலையொருதாட் சூலமேந்துதன்
மூவரும்யானென மொழிந்தவாறே
ஈண்ணுதைகமூர்த்தி யென்பதிவ்வுலகினில்
உண்மையானென வுணர்த்தியவாறே
நிலநீர்தீவளி யகல்வானென்றும்
உலவாத்தொல்புக ழுடையோயென்றும்
பொருளுநற்பூதப் படையோயென்றும்
தெருளாநின்றுலகினிற் றெருட்டுமாறே
ஈங்கிவைமுதலா வண்ணமும்வடிவும்
ஓங்குநின்பெருமை யுணாத்தவுமுணராத்
தற்கொண்டிமாந்தர் தம்மிடைப்பிறந்த
சொற்பொருள்வண்மையிற் சுழலுமாந்தர்க்
காதியாகிய வறுதொழிலாளர்
ஓதலோவா வொற்றியூர
சிறுவர்தஞ்செய்கையிற் படுத்து
முறுவலித்திருத்திநீ முகப்படுமளவே. (௩)

அளவினிலிறந்த பெருமையையாயினும்
எனதுளமகலா வொடுங்கினின்றனையே
மெய்யினையிறந்த மெய்யினையாயினும்
வையகமுழுதுநின் வடிவெனப்படுமே
கைவலத்திலைநீ யெனினுங்காதல்
செய்வோர்வேண்டுஞ் சிறப்பொழியாயே
சொல்லியவகையாற் றுணையலையாயினும்
நல்லுயிர்க்கூட்ட நாயகனீயே
எங்குமுள்ளோ யெனினும்வஞ்சனை
தங்கியவவரைச் சார்விலைநீயே
அஃதான்று
பிறவாப்பிறவியை பெருகாப்பெருமையை
துறவாத்துறவியை தொடாத்தொடர்ச்சியை
நுகராநுகர்ச்சியை நுணுகாநுட்பினை
அகலாவகற்சியை யணுகாவணிமையை
செய்யாச்செய்கையை சிறவாச்சிறப்பினை
வெய்யைதணியை விழுமியைநொய்யை
செய்யைபசியை வெளியைகரியை

ஆக்குதியழித்தி யானபல்பொருள்
நீக்குதிதொகுத்தி நீங்குதியடைதி
எனையவாகிய வெண்ணிலபலகுணம்
நினைதொறுமயக்கு நீர்மையவாதலின்
ஓங்குகடலுடுத்த வொற்றியூர
னீங்கிதுமொழிவார் தம
சொன்னிலைசுருங்கி னல்லது
நின்னியலறிவோ ரியாரிருநிலத்தே. (௭)
நிலத்திடைப்பொறையா யவாவிலி னின்று
சொலத்தகுபெருமைத தூராலாகனை
மெயவலியையொடு பிததொன்றாக
ஐவகைநெடுங்கா றருங்குடையிடப்ப
நரையெனுநுரையே நாடொறுமெழுப்பத்
திரையுடைத்தோலே செழுந்திரையாகக்
கூடியகுருதி நீரினுண்ணிறைந்து
மூடியவிருமலோலையின்று மூழ்கிச
சுடுபசிவெகுளிச் சுறவினமெறியக்
குடரெனுமாலாக் கூட்டம்வந்தொலிப்ப
ஊன்றடியெலும்பி னுட்டிடலெடுந்து
தோன்றியபலபிணிய பின்னகஞ்சுழலக்
காலனையீரம்பே கண்டமாக
மேதகுநிணமே மெய்ச்சாலாக
முழக்குடைத்தளையே முகங்களாக
வழக்குடைமூக்கா றுசயலம்பொலிப்ப
இப்பரிசியற்றிய வுடலிருங்கட்டுத்
துப்புரவெனனுநின் சுழித்தலைப்பட்டு
ஆவாவென்னுநின் னருளினைபெற்றவர்
காவாயாகிய நாதநினபாத
மூந்திசசென்று முறைமையின்வணங்கிச
சிந்தைக்கூம்பினைச் செவ்வியலிறத்தி
உருகியகாரா வாயப்பூரித்துப
பெருகியநிறையெனுங கயிற்றிடைப்பிணித்துத்
துன்னியசுற்றச் சுடர்ககயிறறுத்து
மன்னியவொருமைப் பொறியினைமுறுகக்
காமபபாறொனுங கடுவெளியற்ற
தூமச்சோதிச் சுடர்க்குறநிறுத்திச்
சுருங்காவுணர்ச்சித் துடுப்பினைத்தழாவி
நெருங்காவளவி னீளகரையேற்ற

வாங்கவார்த்திரை நோக்குதிபோலும்
ஒருங்குகட லுடுத்த வொற்றியூர. (அ)
ஒற்றியூர வுலவாநின்குணம்
பற்றியாரப் பரவுதல்பொருட்டா
என்னிடைப்பிறந்த வின்னாப்புன்மொழி
நின்னிடையணுகா நீர்மையவாதலின்
ஆலித்தழுதலி லகன்றதம்மனைக்
கேவலஞ்செய்மையிற் கேளாளாயினும்
பிரித்தற்கரியாப் பெற்றியதாகிக்
குறைவினிலார்த்துங் குழல்வித்தியல்வினை
யறியாதெண்ணி லூழிப்பிறவியின்
மயங்கிக்கண்ணிலர் கண்பெற்றாங்கே
தாய்தலைப்பட்டநின் றாளிணைவணக்கம்
வாய்தலையறியா மயக்குறும்வினையேன்
மங்கியவின்பத் தோடுடன்கூடிய
வெல்லையிலவாவினி லியற்றியவாகக்
கட்டியநீயே யவிழ்க்கினல்ல
தெட்டனையாயினு மியானிதற்கறியேன்
றன்னிடையிருளென்னுந் தூற்றிடையொதுங்கி
வெள்ளிடைகாண விருப்புறுவினையேன்
தந்தையுந்தாயுஞ் சாதியுமறிவுநஞ்
சிந்தையுந்திருவுஞ் செல்கதித்திறனுந்
துன்பமுந்துறவுந் தூய்மையுமறிவு
மின்பமும்புகழு மிவைபலபிறவுஞ்
சுவையொளியூறோசை நாற்றந்தோற்ற
மென்றிவைமுதலா விளங்குவவெல்லா
மொன்றநின்னடிக்கே யொருங்குடன்வைத்து
நின்றனன்றனியே னின்னடியலது
சார்வுமற்றின்மையிற் றளர்ந்தோர்காட்சிச்
சேர்விடமதனைத் திறப்படநாடி
யெய்துதற்கரியோ யானினிச்
செய்வதுமறிவனோ தெரியுங்காலே. (கூ)
காலற்சீறிய கழலோய்போற்றி
மூலத்தொகுதி முதல்வபோற்றி
யொற்றிமாநக ருடையோய்போற்றி
முற்றுமாகிய முதல்வபோற்றி
பணைதொறுஞ்சிறக்கு மயிர்தேபோற்றி
யிணைபிறிதில்லா வீசபோற்றி

யார்வஞ்செய்பவர்க் கனியோய்போற்றி
தீர்வில்லின்சுவைத் தேனேபோற்றி
வஞ்சனைமாந்தரை மறந்தோய்போற்றி
நஞ்சினையமிர்தா நயந்தோய்போற்றி
விரிகடல்வையக வித்தேபோற்றி
புரிவுடைவனமாப் புணர்ந்தோய்போற்றி
காணமுன்பொருள் கருத்துறைசெம்மைக்
காணியாகிய வரனேபோற்றி
வெம்மைதண்மையென் றிவைகுணமுடைமையிற்
பெண்ணொடாணெனும் பெயரோய்போற்றி
மேவியவவர்தமை வீட்டினிற்படுக்குந்
தீபமாகிய சிவனேபோற்றி
மாலோய்போற்றி மறையோய்போற்றி
மேலாய்போற்றி வேதியபோற்றி
சந்திரபோற்றி தழலோய்போற்றி
யிந்திரபோற்றி யிறைவபோற்றி
யமராபோற்றி யழகாபோற்றி
குமாராபோற்றி கூத்தாபோற்றி
பொருளேபோற்றி போற்றியென்றுனை
நாத்தழும்பிருக்க நவிற்றினல்ல
தேற்றுதற்குரியோ ரியாரிருநிலத்தே. (௧௦)

திருச்சிற்றம்பலம்

முற்றிற்று.

உ

கணபதிதுணை.

## திருச்சிற்றம்பலம்.



### பதினொன்றாந் திருமுறையுள்

திருவெண்காடரென்னும்

### பட்டணத்துப்பிள்ளையார் அருளிச்செய்த

ஐந்தாவது

# திருவேகம்பமுடையார் திருவந்தாதி



திருச்சிற்றம்பலம்.

கட்டளைக்கலித்துறை.

மெய்த்தொண்டர்செல்லுநெறி யறியேன்மிகநற்பணிசெய்
கைத்தொண்டர்தம்மிலுநற் றொண்டுவந்திலனுண்பதற்கே
பொய்த்தொண்டுபேசிப் புறமபுறமேயுனைபோற்றுகின்ற
யித்தொண்டனேன்பணி கொள்ளுதியோகச்சியேகம்பனே. (௧)

ஏகம்பனேயென்னையாள்பவனே யிமையோர்க்கிரங்கிப்
போகம்பன்னருநங்கொடுக்கின்ற நாயகபொங்குமைவாய்
நாகம்பொன்னாரமெனப் பொலிவுற்றுன்னீறணியும்
ஆகம்பொனமாமலையொப்பவனே யென்பனுதரித்தே. (௨)

தரித்தேன்மனத்துன் றிகழ்தருநாமந்தடம்பொழில்வாய்
வரித்தேன்முரல்கச்சியேகம்பனே யென்றன்வல்வினையை
யரித்தேனுனைப்படியாதவரோடுமை கண்டவரைச்
சிரித்தேனுனக்கடி யாரடிபூணத்தெளிந்தனனே. (௩)

தெளிதருகின்றதுசென்றென் மனநின்றிருவடிவம்
அளிதருநின்னருட்கைய மில்லையந்திச்செக்கர்
ஒளிதருமேனியெம்மேகம்பனே யென்றுகந்தவர்தாள்
தளிதருதூளியென்றன்றலை மேல்வைத்ததன்மைபெற்றே. (௪)

பெற்றுகந்தேனென்றுமர்ச்சனைசெய்யப்பெருகுநின்சீர்
கற்றுகந்தேனென்கருத்தினிதாகக்கச்சியேகம்பத்தின்
பற்றுகந்தேறு முகந்தவனேபடநாகக்கச்சின்
சுற்றுகந்தேர்விடைமேல்வருவாய்நின்றுணையடியே. (௫)

அடிநின்றசூழல்கோசரமாலுக்கயற்கலரின்
முடிநின்றசூழன்முடி காண்பரிதாயிற்றுக்கார்முகிலின்
இடிநின்றசூழ்குரலேறுடையேகம்பயாமெங்ஙனே
வடிநின்றசூலப்படையுடையாயை வணங்குவதே. (௬)

வணக்கந்தலைநின்றிருவடிக்கேசெய்யு மையல்கொண்டோ
ரிணக்கன்றிமற்றோரிணக்கறி யோமல்லல்வல்லரவின்
குணக்குன்றவில்லிகுளிர்கச்சியேகம்பங்கூடினல்லாற்
கணக்கொன்றுமற்றொருதேவரைப்பாடுங்கவிநலமே. (௭)

நலந்தராதொன்றுசொல்லுவன்கேண்மினல்லீர்களன்பு
கலந்தரனார்கச்சியேகம்பங்கண்டுகனற்றிகிரி
சலந்தரனாகமொழிக்கவைத்தாய்தக்கன்வேள்வியெல்லா
நிரந்தரமாகச்செய்தாயென்றுபூசித்துநின்மின்களே. (௮)

மின்களென்றார்சடைகொண்டலென்றார்கண்டமேனிவண்ணம்
பொன்களென்றார்வெளிப் பாடுதம்பொன்னடிபூண்டுகொண்ட
வென்களென்றாலும்பிரிந்தறியார்கச்சி யேகம்பத்தான்
றன்களென்றாருலகெல்லாநிலைபெற்றதன்மைகளே. (௯)

தன்மையிற்குன்றாத்தவத்தோரிமையவர்தாம்வணங்கும்
வன்மையிற்குன்றாமதிற்கச்சியேகம்பர்வண்கயிலைப்
பொன்மயிறசாயலுஞ்சேயரிக்கண்ணும்புரிகுழலும்
மென்மையிற்சாயுமருங்குலுங்காதல விளைத்தனவே. (௧0)

தனமிட்டுமைதழுவத்தழும்புற்றவர்தம்மடியார்
மனமவிட்டகலாமதிற்கச்சியேகம்பர்வான்கயிலைச்
சினம்விட்டகலாக்களிறுவினாவியோர்சேயனையார்
புனம்விட்டகலார்பகலாம்பொழுதுநமனுங்கொடியே. (௧௧)

பூங்கொத்திருந்தழைசார் பொழிற்கச்சியேகம்பர்பொற்பார்
கோங்கத்திருந்தகுடுமிக்கயிலையெம்பொன்னொருத்தி
பாங்கொத்திருந்தனைபாரனங்கேபடர்கல்லுருவி
யாங்கத்திருந்தழையாடிவந்தாற்கண்டடிவருத்தே. (௧௨)

வருத்தந்தருமெய்யு மைகையிறறழையும்வன்மாவினவுங்
கருத்தந்தரிக்குநடக்கவின்றையகழலிணையத்
திருத்தந்தருளுந்திகழ்கச்சியேகம்பர்சீர்கயிலைத்
துருத்தந்திருப்பதல்லிப்புனங்காக்குந்தொழிலெமக்கே. (௧௩)

எம்மையுமெம்மைப்பணிகொள்ளுங்கம்பமொழிற்கயிலை
யும்மையுமானிடமிப்புனத்தேவிற்றுவந்தமைந்தர்
தம்மையுமானையுஞ்சிந்தையுநோக்கங்கவர்வென்றோ
வம்மையுமம்மலர்க்கண்ணும் பெரியீரருளுமினே. (௧௪)

அருளைத்தருகம்பரம்பொற்கயிலையுளெம்மையரம்
பிருளைக்கரிமறிக்கும்மிவரையருறுத்திபெய்ய
வெருளக்கலைகணைதன்னொடும்போயினவில்லிமைக்கு
மருளைத்தருசொல்லியெங்கோவிலையுள்ளடிவ்வையகத்தே. (௧௫)

மையார்மழுப்படையேகம்பர்நீங்கோய்மலைபுனத்து
ஐயார்வருகலையேனங்கரிதொடர்வேட்டையெல்லாம்
பொய்யானவையர்மனத்தவெம்பூங்கொடி கொங்கைபொருப்
பையாரரவிடையாயிற்றுவந்துபரிணமித்தே. (கசு)

பருமுத்துதிர்த்திடுஞ்சீர்மத்தயானை நுதல்பகுந்திட்
டுருமொத்ததிண்குரற்சீயந்திரிநெறியோங்குவைவரய்ப்
பொருமுத்தலைவேற்படைக்கம்பர்பூங்கயிலைப்புனத்துட்
டருமுத்தனநகைத்தன்னசையால்வெற்பசார்வரிதே, (கஎ)

அரிதன்றிருக்கண்ணிடநிரம்பாயிரம்போதணிய
அரிதன்றிருவடிக்கர்ச்சித்தகண்ணுக்கருளுகம்பர்
அரிதன்றிருக்கங்குலியாலழிந்தகயிலையல்லிங்
கரிதென்றிருப்பதெம்பால்வெற்பவெம்மையர்க்கஞ்சுதுமே. (கஅ)

அஞ்சரத்தான்பொடியாய்விழத்தீவிழித்தன்புசெய்வோர்
நெஞ்சரத்தாழ்வுகந்தோர்கச்சியேகம்பர்நீள்கயிலைக்
குஞ்சரத்தாழ்வரைவீழநுங்கொம்புய்யக்கும்பமுழ
வெஞ்சரத்தானவோவல்லவோவிவ்வியன்முரசே. (கக)

சேய்தந்தகைம்மையுமைகணவன்றிருவேகம்பத்தான்
றாய்தந்தையாயுயிர்காப்போன்கயிலைத்தயங்கிருள்வாய்
வேய்தந்ததோளிநம்மூசலொடுமவிளைவேங்கைதன்னைப்
பாய்தந்துபூசலுண்டாங்கொண்டதோசைபகடுவந்தே. (உ0)

வந்துமணம்பெறிற்பொன்னனையீர்மன்னுமேகம்பர்தம்
உந்துமருவிக்கயிலைமலையுயர்தேனிழிச்சித்
தந்துமலர்கொய்துந்தண்டினைமேயுங்கிளிகடிந்துஞ்
சிந்தும்புகர்மலைக்கச்சுமிச்சாரற்றிரிந்தவனே. (உக)

திரியப்புரமெய்தவேகம்பனார்திகழுங்கயிலைக்
கிரியக்குறவர்பருவத்திடுதாளம்வினையோம்
விரியச்சுருண்முதலானுமடைந்தோம்விளைவிளைந்து
எரியக்கதிர்முற்றினீர்பெற்றதென்னங்குப்பேசுமினே. (உஉ)

பசுகபாலருணமக்கணியாமொன்றுபித்தமொங்கும்
பூசுகையார்திருநீற்றெழிலேகம்பர்பொற்கயிலைத்
தேசுகையார்சிலைவெற்பன்பிரியும்பரிசிலராக்
கூசுகையாதுமில்லாக்குலவெங்கைப்பெயர்நும்மையே. (உங)

பெயராநலத்தெழிலேகம்பனார்பிறைதோய்கயிலைப்
பெயராதிருக்கப்பெறுகிளிகாள்புனமேபிரிவின்
றுயரால்வருந்திமனமுழியிங்கோடித்தொழுதுசென்ற
வயர்துறையும்வெற்பற்கடியீர்க்கும்விடைதமினே. (உச)

நம்மைப்பிறவிக்கடல்கடப்பிப்பவர்நாம்வணங்கு
மும்மைத்திருக்கண்முகத்தெழிலேகம்பர்மொய்கயிலை
யம்மைக்கருங்கண்ணிதன்னொடின்பந்தருந்தண்புனமே
யெம்மைக்கவலைசெயச்சொல்லியோவல்லியெய்தியதே. (உ௫)

இயங்குந்திரிபுரமெய்தவேகம்பரெழிற்கயிலைத்
தயங்குமலர்ப்பொழில்காளையலாடருவித்தடங்கா
முயங்குமணியறைகாண்மொழியொழியாதுநெஞ்ச
மயங்கும்பரிசுபொன்னூர்சென்றருழல்வகுத்தெமக்கே. (உ௬)

வகுப்பாரிவர்போன்மணத்துக்குநான்மலர்க்கண்ணொடின்ப
மிருப்பார்களாயிரொன்றாமிருவரைவிள்ளக்கள்வாய்
நெகுப்பான்மலர்கொண்டு நின்றார்கிடக்கக்கிலாவேகம்பர்
தொகுப்பான்மணிசிந்தருவிக்கயிலைச்சூழ்புனத்தே. (உ௭)

புனங்குழையாதென்றுமென்றினை கொய்ததும்போகலுற்ற
கனங்குழையாடற்பிரியநமக்குறுங்கையறவால்
மனங்குழையாவருக்கக்கனிபண்பலபாடுதொண்டர்
இனங்குழையாத்தொழுமேகம்பரிக்கயிலாயத்துள்ளே. (உ௮)

உள்ளம்பெரியரல்லாச்சிறுமானிடருற்றசெல்வங்
கள்ளம்பெரியசிறுமனத்தார்க்கறிக்கங்கையென்னும்
வெள்ளம்பெரியசடைத்திருவேகம்பர்விண்ணரணந்
தள்ளம்பெரிகொண்டமைந்தரடியவர்சார்வதன்றே. (உ௯)

அன்றும்பகையடர்க்கும்பரிமாவுமதவருவிக்
குன்றும்பதாதியுநந்தேருங்குலவிக்குடைநிழற்கீழ்
நின்றும்பொலியினுங்கம்பாநின்னிருதாட்கலரோல
என்றுமரசுமுரசும்பொழியாதிருவிலதே. (௩0)

நிலத்திமையோரிம்மலையாய்ப்பிறந்துமறையொடங்கம்
வலத்திமைப்போதும்பிரியாரெரிவளர்த்தாலுமவெற்பன்
குலத்துமைமையோர்பங்கர்கச்சியுளேகம்பங்கூடித்தொழு
நலத்தமையாதவர்வேட்டுவர்தம்மினடிப்படையே. (௩௧)

படையாலுயிர்கொன்றுதின்றுபசுக்களைப்போலச்செல்லு
நடையாலறிவின்றிநாண்சிறதுன்றிநகுங்குலத்திற்
கடையாப்பிறக்கினுங்கச்சியுளேகம்பத்தெங்களையா
னுடையான்கழற்கன்பராலவர்யாவர்க்குமுத்தமரே. (௩௨)

உத்துங்கயானையுரியார்விரலாலரக்கன்சென்னி
பத்துங்கையானவிருபதுஞ்சோர்தரவைத்திலவை
யொத்துங்கையாவவன்பாடக்கயிலையுள்ளோர்நங்கைவா
ளொத்துங்கையானென்றுகந்தளித்தார்கச்சியேகம்பரே. (௩௩)

அம்பரங்காலனனீர்நிலந்திங்களருக்கனனு
வம்பரங்கொள்வதோர்வேழத்துரியவன்றன்னுருவா
மெம்பரன்கச்சியுளேகம்பனதரிடையடைவா
னம்பரன்றன்னடியாரறிவார்கட்கவன்றுணையே. (௩௪)

துணைத்தாமரையடியும்பவளத்திரணன்குறங்கும்
பணைத்தோளகலமுங்கண்டத்துநீலமுமத்துமின்
பணைத்தாலனசடையுந்திருமுககளும்பெண்ணோர்பக்கத்
தணைத்தாரொழிற்கம்பமெங்கள்பிரானார்கழகியவே. (௩௫)

அழகறிவிற்பெரிதாகியவேகம்பரத்தர்கொறமம
பழகறிவிற்பெரியோர்தமைப்பற்றலர்பற்றுமனாபின்
குழகறிவேற்பினுமொன்றறியாரறியாமைதெய்வங்
கிழகெறியப்பட்டிலந்தாருலகிற்கிடந்தனரே. (௩௬)

கிடக்குமொருபாலிரைக்கின்றபாமபொருபான்மதியந்
தொடக்குண்டிலங்கு மலங்குந்திரைக்கங்கை சூடுங்கொன்றை
வடக்குண்டுகெட்டத்தலைமாலைவாளான்மலைபதமெம்போர
தடக்கும்விடைத்திருவேகம்பர்கற்றைச்சடைமுடியே. (௩௭)

கற்றைப்பவளச்சடைவலம்பூக்கமழ்கொன்றையந்தார்
முற்றுற்றிலர்மதியின்கொழுந்தேகம்பர்மொய்குழலா
மற்றைத்திசையின்மணிப்பொறகொழுந்தத்தரளகபூநீர்
தெற்றிப்பொலிகின்றகூட்டழகாகிச்சிகழதருமே. (௩௮)

கருமருட்டன்மைவலப்பாற்கமலக்கணெற்றியின்மேற்
றிருமலர்கண்பிளவின்றிகழுந்தபூலசெல்வக்கம்பர்
கருமலர்க்கண்ணிடப்பாலதுநீலங்கவரிமதத்து
வருநுதற்பொட்டணங்குக்குயர்ந்தோங்குமலர்க்குழலே. (௩௯)

மலர்ந்தபடத்துச்சியைந்திலுஞ்செஞ்சுடர்மாமணிவிட்
டலர்ந்தமணிக்குண்டலம்வலக்காதினி லாடிவரும
லந்திருநீள்வயிரம்வெயிற்பாயுநகுமணிகள்
கலந்தசெம்பொன்மகரக்குழையேகம்பர்காதிடமே. (௪௰)

ாதலைக்கும்வலத்தோள்பவளக்குன்றமங்குயர்ந்து
யாதலைக்கும்பனிப்பொன்மலைநீற்றின்பொலியகலஞ்
ாதலைக்குங்குழல்சேர்பணைத்தோணறுஞ்சாந்தணிந்து
ஞ்தலைக்குமுலைமாபிடமேகம்பர்சுந்தரமே. (௪௧)

ரம்பொற்பழியுமுலகட்டியெய்த்துத்தாந்தளரா
புரம்பொற்புடையதிருவயிறும்வலமும்பர்மும்மைப்
புரம்பொற்பழித்தகம்பர்க்குத்தாத்திடுபூண்முலையு
ரம்பப்பொருதுதளரிளவஞ்சியுநேருடைத்தே. (௪௨)

உடைப்புலியாடையின்மேலுரகக்கச்சுவீக்கிமுஞ்சி
வடத்தொருகோவணந்தோன்று மணிவலமற்றையல்குற்
றுடைக்குறுகாஞ்சித்தொடுத்தவரசிலைதூநுண்டுகில்
ஆடற்பொலிபேறுடையேகம்பமேயவடிகளுக்கே. (௨௩)

அடிவலப்பாலதுசெந்தாமரையொத்ததிர்கழல்சூழ்ந்
திடிகுரற்கூற்றினெருத்திறவைத்ததிளந்தளிரி
னடியிடப்பாலதுபஞ்சுறவஞ்சுஞ்சிலம்பணிந்த
வடிவுடைத்தார்கச்சியேகம்பமேயவரதருகக்கே. (௨௪)

தருக்கவற்றான்மிக்கழப்புரமெய்தயன்றன்றலையை
நெருக்கவற்றீருடமழுவாளிசைந்ததுநெற்கனென்றாம்
பருக்கவற்றாங்கச்சியேகம்பரத்தர்தம்பாம்புகளின
திருக்கயிறாலிட்டருளுங்கடகத்திருக்கரமே. (௨௫)

கரத்தத்தமருகத்தோசைகடுத்தண்டமீபிளப்ப
வரத்தத்தபாதநெரித்திட்டவலிதலநெரியத்
தரத்தத்திசைகளுக்கப்புறம்போரப்பச்சடைவிரித்து
வரத்தைத்தருகமபராடுவமொல்லியுமாநடமே. (௨௬)

நடனம்பிரானுகந்துய்யக்கொண்டானென்றுநன்மறையோ
ருடன்வந்துமூவாயிரவரிறைஞ்சிநிறைந்தவன்பும்
கடனன்றிமற்றறியாத்தில்லையம்பலங்காளத்தியா
மிடமெம்பிரான்கச்சியேகம்பமேயாற்கினியனவே. (௨௭)

இனியவரின்னாரவரையொப்பார்பிறரென்னவெல்லா
தனியவர்தையலுடனுருவரமபணித்த
முனியவனொன்றுமுகந்துமுக்கண்ணவர்தண்டியன்புக்
கினியவர்காய்மழுவாட்படையார்கச்சியேகம்பரே. (௨௮)

பரவித்தனைநினையக்கச்சியேகம்பர்பல்லுனுமையல்
வரவித்தனையுள்ளதெங்கற்ந்தேன்முன்னவர்டகளூர்
புரவித்தனையடிக்கக்கொடிதாய்விடியாவிரவி
லரவித்தனையுமகொண்டார்மடவார்முன்றிலாட்டிட்டவே. (௨௯)

இடவஞ்சுறுக்கெனபபாயுமஞ்சென்னிநகுதலைகல்
லிடவஞ்சுவர்மடவாரிரிகின்றனரேகம்பத்தீர்
படமஞ்சுவாயதுநாகமிரைக்குமதனுக்குமும்
படவஞ்சுவரெங்ஙனேபலிவந்திடும்பாங்குகளே. (௩௰)

பாங்குடைக்கோட்புலியின்னதள் கொண்டீர்தும்பாரிடங்க
டாங்குடைகொள்ளப்பலிகொள்ளவந்தீர்தடங்கமலம்
பூங்குடைகொள்ளப்புனற்கச்சி யேகம்பங்கோயில்கொண்டீ
ரீங்கிடைகொள்ளக்கலைகொள்ளவந்தீரிடைக்குமின்றே. (௩௧

இடைக்குமின்றேந்துமினைமுலையாய்முதியார்கடஞ்சொற்
கடைக்கணற்றுங்கச்சியேகப்பனையங்கொளக்கடவும்
விடைக்குமுன்றோற்றனில்லேன்றினியிந்தமொய்குழலார்
இடைக்குமுன்றோற்றஞ்சங்கிதுவோதங்கிறித்துவமே. (௪௧)

இறிபலபேசிச்சதிராடைந்துவிடங்குபடக்
குறிபலபாடிக்குளிர்கச்சியேகம்பனாய்ங்கொள்ள
செறிபலவார்குழலார்மெலிவுற்றநெடுகதெருவிற்
செறிபலவெள்வளைபோயினதாயர்கடேடுவரே. (௪௨)

தேடுற்றிலகள்ளநோக்கந்தெரிந்திலசொற்கண்முடி
கூடுற்றிலகுழலகொங்கைபொடித்திலகூறுமிவள்
மாடுற்றிலமணியின்மடலலகுலுமற்றிவள்பா
ஊடுற்றிலவெழிலேகம்பனூர்கருள்ளநல்கிடத்தே. (௪௩)

நல்கும்புகழ்கடவூர்நன்மறையவனுய்யநண்ணிக்
கொலகின்கூற்றைக் குமைத்தவெங்கூற்றங்குளிர்திரைகண்
மல்குந்திருமறைக்காட்டமிர்தென்றுமலைமகடான்
புல்கும்பொழிற்கச்சியேகம்பமேவியபொன்மலையே. (௪௪)

மலைபத்தகத்தியனர்ச்சிக்கமன்னிவடகயிலை
நிலையத்தமரர்தொழவிருந்தானெடுமேருவென்னுஞ்
சிலையத்தன்பைம்பொன்மதிற்றிருவேகம்பத்தான்றிகழ்நீ
நிலையத்தடம்பொன்னிசூழ்திருவையாற்றருமணியே. (௪௫)

மணியாருருவித்தடவிமலங்கிடக்கொல்லிகல்லின்
திணியாரருவியினார்த்தசிராமலைவலங்க
அணியாரருவிகவர்கிளிவொப்புமின்சாரலவிந்தம்
பணிவாரருவினைதீர்க்குமேகம்பர்பருப்பதமே. (௪௬)

பருப்பதங்கார்தவழ்மந்தரமிந்திரநீலம்வெள்ளை
மருப்பதங்கார்கருங்குன்றியங்கும்பரங்குன்றமில்லார்
நெருப்பதங்காவுநாறுமயேந்திரமென்றிவற்றி
லிருப்பதங்காவுகந்தான்கச்சியேகம்பத்தெம்மிறையே. (௪௭)

இறைத்தார்புரமெய்தவில்லிமைநல்லிமவான்மகட்கு
மறைத்தார்கருங்குன்றம்வெண்குன்றஞ் செங்குன்றமன்னற்குன்ற
நிறைத்தார்நெடுங்குன்றநீளகழுக்குன்றமென்றிவினைகள்
குறைத்தார்முதுகுன்றமேகம்பர்குன்றென்றுகூறுமினே. (௪௮)

கூறுமின்றொண்டர்குற்றாலநெய்த்தானந்துருத்தியம்பேர்
தேறுமின்வேள்விக்குடித்திருத்தோணிபுரம்பழன
மாறுமின்போற்சடைவைத்தவனூரிடைமருதென்
றேறுமினெம்பிரான்கச்சியேகம்பமுன்னினைந்தே. (௫௦)

நினைவார்க்கருளும்பிரான்றிருச்சோற்றுத்துறையிடம்
புனைவார்சடையோன்புகலூர்புறம்பயம்பூவணநீர்
புனைவார்பொழிற்றிருவெண்காடுபாச்சிலதிகையென்று
நினைவார்தருநெஞ்சினீர்கச்சியேகம்பநண்ணுமினே. ([illegible])

நண்ணிப்பரவுந்திருவாவடுதுறைநல்லநல்லூர்
மண்ணிற்பொலிகடம்பூர்கடம்பந்துறைமன்னுபுன்கூ
ரெண்ணற்கரியபராய்த்துறைநெல்லெதிர்கொள்பாடிக்
கண்ணிப்பிறைச்சடையோன் கச்சியேகம்பங்காண்மின்சென்றே ([illegible])

சென்றேறிவின்னுறுமஞ்ஞைமலைதிகழ்வல்லமென்பூ
வின்றேற்றல்பாய்திருமாற்பேறுபாசூர்பொழிலழுந்தூர்
வன்றோலன்றிருவிற்பெரும்பேறுமதிலொற்றியூர்
நின்றோர்தருகச்சியேகம்பமேயார்நிலாவியவே. ([illegible])

நிலாவுபுகழ்த்திருவோத்தூர்திருவாமாத்தூர்நிறைநீர்
சுலாவுசடையோன்புல்வலம்வில்வலம்கொச்சைதொண்டர்
குலாவுந்திருப்பனங்காடுநன்மாகறல்கூற்றமலைந்தா
லலாயென்றடியார்க்கருள்புரியேகம்பாலயமே. ([illegible])

ஆலயங்கார்கருகாவைகச்சூர்திருகாரிகரை
வேலையங்கேறுதிருவான்மியூர்திருவூறல்மிக்க
சோலையங்கார்திருப்போந்தைகழுக்கோணந்தொடர்கடுக்கை
மாலையன்வாழ்திருவாலங்காடேகம்பம்வாழ்த்துமினே. ([illegible])

வாழப்பெரிதெமக்கின்னருள்செய்யுமலர்க்கழலோர்
தாழச்சடைத்திருவேகம்பர்தம்மைத்தொழாதவர்போய்
வாழப்பரற்சுரமாற்றுதளிரடிப்பூங்குழலெம்
ஏழைக்கிடையிறக்குங்குயபாரமியக்குறினே. ([illegible])

உறுகின்றவெவ்வழலக்கடமிகக்கொடிக்குணபின்வரப்
பெறுகின்றவண்மையினாலையபோருளேகம்பனார்
துறுகின்றமென்மலர்த் தண்பொழிற்கச்சியைச்சூழ்ந்திளையோர்
குறுகின்றபூங்குவளைக்குறுநதண்பணையென்றுகொளே. ([illegible])

கொள்ளுங்கடுங்கதிர்க்கள்ளிக்தீச்சிலவேயுலர்ந்து
விள்ளும்வெடிபடுபாலையென்பாலன்விடலைபின்னே
தெள்ளும்புனற்கச்சியுட்டிருவேகம்பர்சேவடியை
யுள்ளுமதுமறந்தாரெனப்போவதுன்னாய்பரிதே. ([illegible])

பரிப்பருந்திண்மைப்படையதுகானெளிற்சிறகு
விரிப்பருந்துக்கிரையாம்வெய்யவனஞ்சலஞ்சடைமேற்
தரிப்பருந்திணகங்கையார்திருவேகம்பமன்னபொன்னே
வரிப்பருந்திண்சிலையேயுமாயின்மறைகுவனே. ([illegible])

வன்வரித்திண்புலியின்னதளே நம்பமன்னருளே
பென்வருபொன்னணங்கென்னணங்கிற் கெனெழிற்கழுங்குங்
தன்வரிப்பந்துங்கொடுத்தெனைப்புல்லியுமிற்பிரிந்தே
மின்வரிக்கல்லதர்செல்வதெங்கேயொல்குமேழைநெஞ்சே. (௭௦)

நெஞ்சார்தரவின்பஞ்செய்கழலேகம்பர்கச்சியன்னாள்
பஞ்சாரடிவைத்தபாங்கிவையாங்கவள்பெற்றெடுத்த
வெஞ்சார்வொழியத்தன்பின்செல்முன்செல்லெவடுவெடென்ற
வஞ்சாவடுதிறற்காளைதன்போக்கிவையந்தத்திலே. (௭௧)

இலவவெங்கானுனையல்லாற்றொழுஞ்சரணேகம்பனார்
நிலவுஞ்சுடரொளிவெய்யவனேதண்மலர்மிதித்துச்
செலவும்பருக்கைகுளிரத்தளிரடிசெல்சுரத்துன்
குலகுங்கதிரகணிவித்தருள்செய்யுன்னுறுதுணைக்கே. (௭௨)

துணைபெரதீ நகோவையும்போலெழிற் பேதையுந்தோன்றலுமுன்
னிணையொத்தகொங்கையொ டேபொத்தகாதலொடேகினரே
பணையத்தரேறொத்தகாளையைக்கண்டனமற்றவொற்
றிணையொத்தனுக்குடைப்பெண்ணிவடன்னொடுமபேசுமினே. (௭௩)

மின்னலிக்கும்வணக்கத்திடையாளையுமீளியையு
கென்னலிப்பாக்கைவந்தெய்திடுவிரெம்மனையிற்கண்டீர்
முன்னரிப்போக்கருங்குன்றுகடந்தவரின்றுகம்பர்
பொன்னரிதேர்ந்துதொழுங்கச்சிநாட்டிடைவைகுவரே. (௭௪)

டவரச்சொல்வேடுடைக்காடுகந்தாடியவேகம்பனார்
துவரக்கண்போனவிமானத்தையாயிரமுன்னைமைசுற்றும்
றுவரச்சிகரச்சிவாலயஞ்சூலந்துலங்குவிண்மேற்
நவரக்கொடிதிளைக்குங்கச்சிகாணினுங்காமயிலே (௭௫)

கார்மிக்ககண்டத்தெழிற்றிருவேகம்பர்கச்சியின்வா
யோர்மிக்கசேற்றெழினென்னடுவோரொலி பொன்மலைபோற்
போர்மிக்கசென்னெல்குவிப்போரொலிகருப்பாலையொலி
நீர்மிக்கமாக்கடலின்னொலியையொக்குநேரிழையே. (௭௬)

நேர்த்தமையாமைவிறற்கொடுவேடர்நெடுஞ்சுரத்தை
யார்த்தமையாலிமைதீர்ந்தகண்பொன்னேபகட்டுரிவை
போர்த்தமையாலுமைநோக்கருங்கம்பர்கச்சிப்பொழிலுஞ்
சேர்த்தமையாலிமைப்போதணிசீதஞ்சிறந்தனவே. (௭௭)

நிறைவண்டுபாடுங்கமலக்கிடங்கிவைசெம்பழுக்காய்
நிறைகொண்டபாளைக்கமுகின்பொழிலிவைதீங்கனியின்
பொறைகொண்டவாழைப் பொதும்புவைபுன்சடையேகம்பனார்
துறைகொண்டபூங்கச்சிநாடெங்குமிவ்வண்ணநன்னுதலே. (௭௮)

நன்னுதலார்கருங்கண்ணுஞ்செவ்வாயுமிவ்வாறெனப்போய்
மன்னிதழார்திருநீலமுமாம்பலும்பூப்பவன்னை
யென்னவெலாமொப்புகாதென்றுவீறிடுமேகம்பனார்
பொன்னுதலார்விழியார்கச்சிநாட்டுளிப்பொய்கையுளே. (௭௯)
உளவார்குளிரநெருங்கிக்கருங்கிடங்கிட்டநன்னீர்
வளவாளைகளோடுசெங்கயன்மேய்கின்றவெங்கணையாங்
கொளவார்பிறவிகொடாதவேகம்பர்குளிர்குவளை
களவார்தருகச்சிநாட்டெழிலேரிகளப்பரப்பே. (௮௰)
பரப்பார்விசும்பிற்படிந்தகருமுகிலன்னநன்னீர்
தரப்பாசிகண்மிகுபண்பொடுசேம்படர்தண்பணைவாய்ச்
சுரப்பாரொருமைமலர்தின்னத்துன்னுகாரவொருத்தல்
பொரப்பார்பொலிநுதலாய்செல்வக்கம்பர்தம்பூங்கச்சியே. (௮௧)
கச்சார்முலைமலைமங்கைகண்ணாரவெண்ணான்கறமும்
வைச்சார்மகிழ்திருவேகம்பர்தேவிமகிழவின்னோர்
விச்சாதரர்தொழுகின்றவிமானமுந்தன்மமறா
வச்சாலையும்பரப்பாங்கணிமாடங்களோங்கினவே. (௮௨)
ஓங்கினவூரகமுள்ளகமும்பருகிடமாம்
பாங்கினினின்றதரியுறைபாடகந்தெவ்விரிய
வாங்கினவாட்கண்ணிமற்றவர்மைத்துனிவான்கவிக
டாங்கினநாட்டிருந்தாளதுதன்மனையாயிழையே. (௮௩)
இழையாரரவணியேகம்பர்நெற்றிவிழியின்வந்த
பிழையாவருணம்பிராட்டியதின்னபிறங்கலுன்னு
றுழையாவருதிரிசூலத்தனைக்கரும்பொன்கடுக்கைத்
தழையார்பொழிலுதுபொன்னேநமக்குத்தளர்வில்லையே (௮௪)
தளராமிகுவெள்ளங்கண்டுமையோடித்தமைத்தழுவக்
கிளையார்வளைக்கைவடுப்படுமீங்கோர்கிழிபடுத்தார்
வளமாப்பொழிற்றிருவேகம்பமற்றிதுவந்திறைஞ்சி
யுளராவதுபடைத்தோமடவாயிவ்வுலகத்துள்ளே. (௮௫)
உலவியமின்வடம்வீசியுருமதிர்வுண்முழங்கி
வலவியமாமதம்பாய்முகிலியானைகள்வானில்வந்தாற்
சுலவியவார்குழல்பின்னைபொன்பாரிபொணைநினைந்து
நிலவியவேகம்பர்கோயிற்கொடியன்னநீர்மையனே. (௮௬)
நீரொன்னிலும்மழுங்கண்முகில்காணெஞ்சமஞ்சலென்
றோரொன்னிலுந்தமராயுனைப்பாரமாபதிக்கு
நேரொன்னிலுந்தகுங்கச்சியுளேகம்பர்நீண்மதில்வாய்ச்
சேரொன்னிலுந்தங்கும்வாட்கண்ணிதானன்பர்தேர்வரவே. (௮௭)

வாங்கொண்டிலைம்போர் இலங்கிளன் றுமேகம்பர்கச்சியன்னும்
பாங்கொங்கைதுவன் மீனிர்முத்தமன்பர் தங்தேரின்முன்னே [ன்
தாங்கொண்டுபூக்கொண்டுகொண்றைபொன்னாகத் தண்காந்தள்கொத்தி
காங்கொண்டுபொற்சுண்ணமேந்தவும்போந்தனகார்முகிலே. (அஅ)

கார்முகமாரவன்கைக்கொண்டகம்பர்கழற்றொழுது
போர்முகமாப்பன்கவெல்லச்சென்றார்வினையார்புணரி
நீர்முகமாகவிருள்கடுசாந்ததுநேரிழைநா
மார்முகமாகவினைக்கடனீந்துதும்வெய்துயிர்ப்பே. (அகூ)

உயிராயினவன்பர்தேர்வாக்கேட்டுமுன்வாட்டமுற்ற
பயிரார்புயல்பெற்றதென்னநம்பல்வளையான்மைகளாந்
தயிரார்பானெய்யொடுமாடியவேகம்பர்தம்மருள்போற்
கயிராவளையழுந் தக்கச்சிறுத்தன கார்மயிலே. (கூ0)

கார்விடைவண்ணத்தனன்றேழ்தழுவினுமின்றுதனிப்
போர்விடைப்பெற்றெதிர்மாண்டாரெனவண்டர்போதவிட்டார்
தார்விடையேகம்பர்கச்சிப்புறவிடைதம்பொனன்பூண்
மார்விடைவைகல்பெறுவார்தழுவமழவிடையே. (கூக)

விடையாய்கொடுமையென்னுதுமேலாங்கன்னிவேற்கருங்கட்
கடையாய்மனத்தினங்காளையர்புல்கொலிகம்பர்கச்சி
மடையாய்வயலிளமுல்லையின்மான்கன்றொடான்கன்றினங்
கிடையாய்தொறும்பதிமன்றிற்கடல்போழ்கலநதெழுமே. (கூஉ)

எழுமலர்த்தண்பொழிலேகம்பர்கச்சியிருங்கடல்வாய்க்
கொழுமணப்புன்னைக்குரவான்மணற்குன்றிற்பாதர்கொம்பே
செழுமலர்ச்சேலல்ல வாளல்ல வேலல்ல நீலமல்ல
முழுமலர்க்கூரம்பினோரிரண்டாலுமுகத்தனவே, (கூங)

முகம்பாகம்பண்டமும்பாகமென்றோதியமூதுரையை
புகம்பார்த்திரேலென்னலமுயரேகம்பர்கச்சிமுன்னீ
ரகம்பாகவார்வினவில்லையென்னின்பவளச்செவ்வாய்
நகம்பாற்பொழிற்பெற்றகாமுற்றவர்கொள்கநன்மயலே. (கூச)

மயக்கத்தகல்விருட்கொல்லுஞ்சுறவொடறிமகா
மியக்கத்திடுசுழியோதங்கழிகிளரக்கழித்தார்
துயக்கத்தவர்கருளாக்கம்பர்கச்சிக்கடலர்பொன்னூன்
முயக்கத்தகல்வுபொறுள்கொண்கநீர்வருமூர்க்கஞ்சுமே. (கூரு)

மேயிரைவைக்கக்குருகுணராமதுவுண்டுபுன்னை
மீயிரைவண்டோதமர்புக்கடியவிரிகடல்வாய்ப்
பாயிரைகாகங்கொண்டோன்றொழுங்கம்பர்கச்சிப்பவ்வநீர்
தாயிரைகளைமற்றாறிவார்நந்துறைவர்பொய்யே. (கூகா)

பொய்வருநெஞ்சினர்வஞ்சனையாரையும்போகவிடா
மெய்வரும்பேரருளேகம்பர்கச்சிவிரையினவாய்க்
கைவரும்புள்ளொடுசெங்கினமார்ப்பநஞ்சேர்ப்பர்திண்டே
ரவ்வருதாமங்களினம்வந்தார்ப்பவணைகின்றதே. (௯௭)

இன்றுசெய்வோமிதனிற்றிருவேகம்பர்க்கெத்தனையு
நன்றுசெய்வோம்பணிநாளையென்றுளளிநெஞ்சேயுடலிற்
சென்றுசெயாரைவிடுந்துணைநாளும்விடாதடிமை
நின்றுசெய்வாரவர்தங்களினீனெறிகாட்டுவரே. (௯௮)

காட்டைவைத்தார்தம் மையாமிடிப்பூப்பெய்யக்காலவெள்ள
மீட்டிவைத்தார்தொழுமேகம்பரோது மிலாதவெம்மைப்
பூட்டிவைத்தார்தமக்கன்பதுபெற்றுப்பதிற்றுப்பத்துப்
பாட்டிவைத்தார்பரவித்தொழுதாமவாபாதங்களே. (௯௯)

பாதம்பரவியோர்பித்துப்பிதற்றிலும்பல்பணியும்
மேதம்புகுதாவகையருளேகம்பரோத்தெனவே
போதம்பொருளாம்பொலியாதபுன்சொற்பனுவல்களும்
வேதம்பொலியும்பொருளாமெனக்கொள்வர் மெய்த்தொண்டரே. (௱)

திருச்சிற்றம்பலம்.



உ

கணபதிதுணை.

பட்டணத்துப்பிள்ளையார்

# திருப்பாடற்றிரட்டு.



முதலாவது

## கோயிற்றிருவகவல்.

நினைமின் மனனே நினைமின் மனனே
சிவபெரு மானைச் செம்பொனம் பலவனை
நினைமின் மனனே நினைமின் மனனே
அலகைத் தேரி னலமரு காலின்
உலகப்பொய் வாழ்க்கையை யுடலையோம் பற்க
பிறந்தன விறக்கு மிறந்தன பிறக்கும்
தோன்றின மறையு மறைந்தன தோன்றும்
பெருத்தன சிறுக்குஞ் சிறுத்தன பெருக்கும்
உணர்ந்தன மறக்கு மறந்தன வுணரும்
புணர்ந்தன பிரியும் பிரிந்தன புணரும்

அருந்தின மலமாம் புனைந்தன வழுக்காம்
உவப்பன வெறுப்பாம் வெறுப்பன வுவப்பாம்
என்றிவை யனைத்து முணர்ந்தனை யன்றியும்
பிறந்தன பிறந்தன பிறவிக டோறும்
கொன்றனை யனைத்து மனைத்துநினைக் கொன்றன
தின்றனை யனைத்து மனைத்துநினைத் தின்றன
பெற்றனை யனைத்து மனைத்துநினைப் பெற்றன
ஓம்பினை யனைத்து மனைத்துநினை யோம்பின
செல்வத்துக் களித்தனை தரித்திரத் தழுங்கினை
சுவர்க்கத் திருந்தனை நரகிற் கிடந்தனை
இன்பமுந் துன்பமு மிருநிலத் தருந்தினை
ஒன்றொன் றொழியா துற்றனை யன்றியும்
புற்புதக் குரம்பைத் துச்சிலொதுக்கிடம்
என்னநின் றியங்கு மிருவினைக் கூட்டைக்
கல்லினும் வலிதாக் கருதினை யிதனுள்
பூளையு நீரும் புறப்படு மொருபொறி
மீளுங் குறும்பி வெளிப்படு மொருபொறி
சளியு நீருந் தவழு மொருபொறி
உமிழுநீர் கோழை யொழுகுமொருபொறி
வளியு மலமும் வழங்கு மொருவழி
சலமுஞ் சீயுஞ் சரியு மொருவழி
உள்ளுறத் தொடங்கி வெளிப்பட நாறும்
சட்டக முடிவிற் சுட்டெலும்பாகும்
உடலுறு வாழ்க்கையை யுள்ளுறத் தேர்ந்து
கடிமலர்க் கொன்றைச் சடைமுடிக் கடவுளை
ஒழிவருஞ் சிவபெரும் போகவின் பத்தை
நிழலெனக் கடவா நீர்மையொடு பொருந்தி
எனதற நினைவற விருவினை மலமற
வரவொடு செலவற மருளற விருளற
இரவொடு பகலற விகபர மறவொரு
முதல்வனைத் தில்லையுண் முளைத்தெழுஞ் சோதியை
அம்பலத் தரசனை யானந்தக் கூத்தனை
நெருப்பினி லரக்கென நெக்குநெக் குருகித்
திருச்சிற் றம்பலத் தொளிருஞ் சிவனை
நினைமின் மனனே நினைமின் மனனே
சிவபெரு மானைச் செம்பொனம் பலவனை
நினைமின் மனனே நினைமின் மனனே.

## இரண்டாவது கோயிற்றிருவகவல்

காதள வோடிய கலகப் பாதகக்
கண்ணியர் மருங்கிற் புண்ணுடை யுடங்
காதலுங் கருத்துமல் லானின் னிருதாட்
பங்கயஞ் சூடப் பாக்கியஞ் செய்யாச்
சங்கடங் கூர்ந்த தமியேன் பாங்கிருந்
தங்கோ டிங்கோ டலமருங் கள்வர்
ஐவர் கலகமிட் டலைக்குங் கானகம்
சலமலப் பேழை யிருவினைப் பெட்டகம்
வாத பித்தங் கோழை குடிபுகுஞ் சீறூர்
ஊத்தைப் புன்றோ லுதிரக் கட்டளை
நாற்றப் பாண்ட நான்முழத் தொன்பது
பீற்றற் றுண்டம் பேசுமாத் தோட்டம்
அடலைப் பெரிய சுடலைத் திடருள்
ஆசைக் கயிற்றி லாடும் பம்பரம்
ஓயா நோய்க்கிட மோடு மரக்கலம்
மாயா விகார மரணப் பஞ்சரம்
சோற்றுத் துருத்தி தூற்றும் பத்தம்
காற்றிற் பறக்குங் கானப் பட்டம்
விதிவழித் தருமன் வெட்டுங் கட்டை
சதுர்முகப் பாணன் றைக்குஞ் சட்டை
ஈமக் கனலி லிடுசில விருந்து
காமக் கனலிற் கருகுஞ் சருகு
கிருமி கிண்டுங் கிழங்கஞ் சருமி
பவக்கொழுந் தேறுங் கவைக்கொழு கொம்பு
மணமாய் நடக்கும் வடிவின் முடிவிற்
பிணமாய்க் கிடக்கும் பிண்டம் பிணமே
ஊரிற் கிடக்க வொட்டா வுபாதி
காலெதிர் குவித்த பூளை காலைக்
கதிரெதிர்ப் பட்ட கடும்பனிக் கூட்டம்
அந்தரத் தியங்கு மிந்திர சாபம்
அதிருங் மேகத் துருவி னருநிழல
நீரிற் குமிழி நீர்மே லெழுத்து
கண்டுயில கனவிற் கண்ட காட்சி
அதனினும் பொல்லா மாயக் களங்கம்
அமையு மமையும் பிரானே யமையும்
இமைய வல்லி வாழியென் றேத்த
ஆனந்தத் தாண்டவங் காட்டி
ஆண்டுகொண் டருள்வது நின் னருளினுக் கழகே.

மூன்றாவது.

## கோயிற்றிருவகவல்.

பாற்கடல் கடையப் படுங்கடு வெண்ணெயைத்
திருமிடற் றடக்கிய சிவனே யடைக்கலம்
அடங்காது மடக்கிடுங் கடுங்கொலைக் காலனைக்
காலெடுத் தடக்கிய கடவுளி னடைக்கலம்
உலகடங் கலும்படைத் துடையவன் றலைபறித்
திடக்கையி லடக்கிய விறைவனி னடைக்கலம்
செய்யபொன் னம்பலச் செல்வனி னடைக்கலம்
ஐயனி னடைக்கல மடியனி னடைக்கலம்
மனைவழி யலைத்திடுங் கனவெனும் வாழ்க்கையும்
விழுப்பொரு ளறியா வழுக்குறு மனனும்
ஆணவ மலத்துதித் தலைந்தறி வுலைந்திடு
வினையைப் பழுவென வெளித்திடு சிந்தையும்
மடிவும் பாவமும் பழிப்புறு நினைப்பும்
தவறு மழுக்காறு மிவறுபொச் சாப்பும்
கவடும் பொய்யுஞ் சுவடும் பெருஞ்சின
விகலுங் கொலையு மிழிப்புறு புன்மையும்
பகையு மச்சமுந் துணிவும் பனிப்பும்
முக்குண மடமையு மைம்பொறி மயக்கமும்
இடும்பையும் பிணியு மிடைந்திய வாக்கையை
உயிரொடுங் குருகுவிட் டோடுங் குரம்பையை
எலும்பொடு நரம்புகொண் டிடையிற் பிணித்துக்
கொழுந்தசை மேய்ந்து மொழுக்குவிழுங் குடிலைச்
செழும்பெழு வுதிரச் சிறுபுழுக் குரம்பையை
மலவுடற் குடத்தைப் புலவுடம் புட்டிலைத்
தொலைவிலாச் சோற்றுத் துன்பக் குழியைக்
கொலைபடைக் கலம்பல கிடக்குங் கூட்டைச்
சலிப்புறு வினைப்பல சரக்குக் குப்பையைக்
கோட்சரக் கொழுகும் பீறற கோணியைக்
கோபத் தீமூட்டுங் கொல்லன் றுருத்தியை
ஐம்புலப் பறவை யடையும்பஞ் சரத்தைப்
புலர்க் கவலை விளைமரப் பொதும்பை
ஆசைக் கயிற்றி லாடும்பம் பரத்தைக்
காசிற் பணத்திற் சுழலுங் காற்றாடியை
மக்கள் வினையின் மயங்குந் திகிரியைக்
மயல்வெளி யுருட்டிய சகடக் காலைப்
பாவச் சரக்கொடு பவக்கடல் புகுங்
காமக் காற்றெடுத் தலைப்பக்

கெடுவழிக் கரைசேர் கெடுமரக் கலத்தை
இருவினை விலங்கொடு மியங்குறுங் கலனை
நடுவன் வந் தழைத்திட நடுங்கிடும் யாக்கையைப்
பிணமெனப் படுத்தியான் புறப்படும் பொழுதுநின்
னடிமலர்க் கமலத்துக் கபயநின் னடைக்கலம்
வெளியிடை யுருமிடி யிடித்தென வெறித்தெழுங்
கடுநடை வெள்விடைக் கடவுணின் னடைக்கலம்
இமையா நாட்டத் திறைவ யடைக்கலம்
அடியார்க் கெளிய யடைக்கல மடைக்கலம்
மறையவர் தில்லை மன்றுணின் றாடிக்
கருணைகொண் டலையெறி கடலே யடைக்கலம்
தேவரு முனிவருஞ் சென்றுநின் றேத்தப்
பாசிழைக் கொடியொடு பரிந்தருள் புரியும்
எம்பெரு மானின் னிணையடிக் கபயம்
அம்பலத் தரசே யடைக்கல முனக்கே.



நான்காவது

## கச்சித்திருவகவல்.

திருமால் பயந்த திசைமுக னமைத்து
வருமேழ் பிறவியு மானுடத் துதித்து
மலைமகள் கோமான் மலரடி யிறைஞ்சிக்
குலவிய சிவபதங் குறுகா தவமே
மாதரை மகிழ்ந்து காதல்கொண் டாடும்
மானிடர்க் கெல்லாம் யானெடுத் துரைப்பேன்
விளிவெளி மாக்க டெளிவுறக் கேண்மின்
முள்ளுங் கல்லு முயன்று நடக்கும்
உள்ளங் காலைப் பஞ்செனவுரைத்தும்
வெள்ளெலும் பாலே மேவிய கணைக்காற்
றன்னும் வாழையெனச் சொல்லித் துதித்தும்
தசையு மெலும்புந் தக்கபுன் குறங்கை
இசையுங் கதலித் தண்டென வியம்பியும்
நெடுமுட றாங்கி நின்றிடு மிடையைத்
துடிபிடி யென்று சொல்லித் துதித்தும்
மலமுஞ் சலமும் வழும்புந் திரையும்
அலையும் வயிற்றை யாலிலை யென்றும்
சிலந்தி போலக் கிளைத்துமுன் னெழுந்து
திரண்டு விம்மிச் சீப்பாய்ந் தேறி.

உயிராம் இறை வுணர்ந்துள் ளுருகி
கருவார்க் கிடமாய் கான்று வற்றும்
முலையைப் பார்த்து முளரிமொட் டென்றும்
குலையுங் காமக் குருடர்க் குரைப்பேன்
நீட்டவு முடக்கவு நெடும்பொருள் வாங்கவும்
ஊட்டவும் பிசையவு முதவியிங் கியற்றும்
அங்கையைப் பார்த்துக் காந்தளென் றுரைத்தும்
வேர்வையு மழுக்கு மேவிய கழுத்தை
பாரினி லினிய கமுகெனப் பகர்ந்தும்
வெப்பு மூத்தையு மேவிய வாயைத்
துப்பு முருக்கின் றூயமல ரென்றும்
அன்னமு கறியு மசைவிட் டிறக்கும்
முன்னிய பல்லை முத்தென மொழிந்தும்
நீருஞ் சளியு நின்றுநின் றொழுகும்
கூரிய மூக்கைக் குமிழெனக் கூறியும்
தண்ணீர் பீளை தவிரா தொழுகும்
கண்ணைப் பார்த்துக் கழுநீ ரென்றும்
உள்ளுங் குறும்பி யொழுகுங் காதை
வள்ளைத் தண்டின் வளமென வாழ்த்தியும்
கையு மெண்ணெயுங் கலவா தொழியில்
வெய்ய வதரும் பேனும் விளையத்
தக்க தலையோட் டின்முளைத் தெழுந்த
சிக்கின் மயிரைத் திரள்முகி லென்றும்
சொற்பல பேசித் துதித்து நீங்கள்
நச்சிச் செல்லு நரக வாயில்
தோலு மிறைச்சியுந் துதைந்துசீப் பாயும்
காமப் பாழி கருவிளை கழனி
தூமைக் கடவழி தொலைபெறு வாயில்
எண்சா ணுடம்பு மிழியும் பெருவழி
மண்பாற் காமங் "கழிக்கு" மறைவிடம்
நச்சிக் காமுக ருய்நா ளென்றும்
இச்சித் திருக்கு மிடைகழி வாயில்
திங்கட் சடையோன் றிருவரு ளில்லார்
தங்கித் திரியுஞ் சவலைப் பெருவழி
புண்ணிது வென்று புடவையை மூடி
உண்ணீர் பாயு மோசைச் செழும்புண்
மலங்கொண் டடியா மந்தர் புகுமவழி

நோய்கொண் டொழியா நுண்ணியர் போம்வழி
தருக்கிய காமுகர் சாரும் படுகுழி
செருக்கிய காமுகர் சேருஞ் சிறுகுழி
யென்னு மாணும் பிறக்கும் பெருவழி
மலஞ்சொரிந் திழியும் வாயிற் கருகே
சலஞ்சொரிந் திழியும் தண்ணீர்வாயில்
இத்தை நீங்க வினிதெனை வேண்டா
பச்சிலை யிடினும் பத்தர்க் கிரங்கி
மெச்சிச் சிவபத வீடருள் பவனை
மூத்தி நாதனை மூவா முதல்வனை
அண்ட ரண்டமு மனைத்துள புவனமுங்
கண்ட வண்ணலைக் கச்சியிற் கடவுளை
ஏக நாதனை யிணையடி யிறைஞ்சுமின்
போக மாதரைப் போற்றுத லொழிந்தே.

திருச்சிற்றம்பலம்.



## திருவேகம்பமாலை.

அறந்தானியற்றுமவனிலுங்கோடியதிகமில்லந்
துறந்தானவனிற்சதகோடியுள்ளத்துறவுடையோன்
மறந்தானறக்கற்றறிவோடிருந்திருவாதனையற்
றிறந்தான்பெருமையையென்சொல்லுவேன்கச்சியேகம்பனே. (௧)

கட்டியணைத்திடும்பெண்டிருமக்களுங்காலத்தச்சன்
வெட்டிமுறிக்குமரம்போற்சரீரத்தைவீழ்த்திவிட்டாற்
கொட்டிமுழக்கியழுவார்மயானங்குறுகியப்பா
லெட்டியடிவைப்பாரோவிறைவா கச்சியேகம்பனே. (௨)

கைப்பிடிநாயகன்றூங்கையிலேயவன்கையையெடுத்
தப்புறந்தன்னிலசையாமன்முன்வைத்தயல்வளவி
லொப்புடன்சென்றுதுயினீத்துப்பின்வந்துறங்குவளை
யெப்படிநானம்புவேனிறைவா கச்சியேகம்பனே. (௩)

நன்னாரிற்பூட்டியசூத்திரப்பாவைநன்னார்தப்பினாற்
பின்னுமாடிச்சலித்திடுமோவுந்தத்தன்மையைப்போ
லுன்னாலியானுந்திரிவதல்லாலன்மற்றுனைப்பிரிந்தா
லென்னாலிங்காவதுண்டோவிறைவா கச்சியேகம்பனே. (௪)

நல்லாரிணக்கமுநின்பூசைநேசமுஞானமுமே
யல்லாதுவேறுநிலையுளதோவகமும்பொருளு

பிறும்லமுமுதிரமுஞ்சாயும்பெருங்குழிவிட்
டேறுங்கரைகண்டிலேனிறைவா கச்சியேகம்பனே. (௧௪)

பொருளுடையோரைச்செயலினும்வீரரைப்போர்க்களத்துந்
தெருளுடையோரைமுகத்தினுந்தேர்ந்துதெளிவதுபோ
லருளுடையோரைத்தவத்திற்குணத்திலருளிலன்பி
லிருளறுசொல்லினுங்காணத்தகுங் கச்சியேகம்பனே. (௧௫)

பருத்திப்பொதியினைப்போலேவயிறுபருக்கத்தங்க
டுருத்திக்கறுசுவைபோடுகின்றார்துறநதோர்தமக்கு
வருத்தியமுதிடமாட்டாரவரையிம்மாநிலத்தி
லிருத்திக்கொண்டேனிருக்தாயிறைவா கச்சியேகம்பனே. (௧௬)

பொல்லாவிருளகற்றுங்கதிர்கூகையென்புட்கண்ணிற்குக்
கல்லாயிருந்திடுமாறொக்குமேயறிவோருளத்தில்
வல்லோரறிவாரறியார்தமக்குமயக்கங்கண்டா
யெல்லாம்விழிமயக்கேயிறைவா கச்சியேகம்பனே. (௧௭)

வாதுக்குச்சண்டைக்குப்போவர்வருவர்வழக்குரைப்பர்
தீதுக்குதவியுஞ்செய்திடுவார்தினநதேடியொன்று
மாதுக்கீந்துமயக்கிடுவார்விதிமாளுமட்டு
மேதுக்கிவர்பிறந்தாரிறைவா கச்சியேகம்பனே. (௧௮)

ஓயாமற்பொய்சொல்வர்நல்லோரைநிந்திப்பருற்றுப்பெற்ற
தாயாரைவைவர்சதியாயிரஞ்செய்வர்சாத்திரங்க
ளாயார்பிறர்க்குபகாரஞ்செய்யார்தமையண்டினர்க்கொன்
றீயாரிருந்தென்னபோயென்னகாண் கச்சியேகம்பனே. (௧௯)

அப்பென்றும்வெண்மையதாயினுமாங்கந்நிலத்தியல்பாய்த்
ப்பின்றியேகுணவேற்றுமைதான்பலசார்தலினாற்
பிலபக்குவமபககுவமாயுள்ளசீவனிலு
மியபடியேநிறபனெங்கைபிரான் கச்சியேகமபனே. (௨௦)

நாயாய்ப்பிறந்திடினல்வேட்டையாடிநயமபுரியுந
தாயார்வயிற்றினராய்ப்பிறந்துபின்சம்பூன்னராய்க்
காயாமரமும்வறளாங்குளமுங்கலலாவுமென்ன
வீயாமனிதரையேன்படைத்தாய் கச்சியேகம்பனே. (௨௧)

ஆற்றிற்கரைத்தபுளியாக்கிடாமலென்னன்னபையெல்லாம்
போற்றித்திருவுளம்பற்றுமையாபுரமூன்றெரித்துக்
கூற்றைப்பணிகொளுந்தாளுடையாய்குன்றவில்லுடையா
யேற்றுக்கொடியுடையாயிறைவா கச்சியேகம்பனே. (௨௨)

பெண்ணாகிவந்தொருமாயப்பிசாசம்பிடித்திட்டென்னைக்
கண்ணால்வெருட்டிமுலையான்மயக்கிக்கடிதடத்துப்

புல்லாங்குழியிடைத்தள்ளியென்போதப்பொருள்பறிக்க
லெண்ணாதுனைமறந்தேனிறைவா கச்சியேகம்பனே. (௨௩)

நாவாரவேண்டும்விதஞ்சொல்லுவாருனைநான்பிரிந்தாற்
சாவேனென்றேயிருந்தொக்கவுண்பார்கள்கைதான்வறண்டாற்
போய்வாருமென்றுநடுத்தலைக்கேகுட்டும்பூவையருக்
கிவார்தலைவிதியோவிறைவா கச்சியேகம்பனே. (௨௪)

கல்லார்சிவகதைநல்லோர்தமக்குக்கனவிலுமெய்
சொல்லார்பசித்தவர்க்கன்னங்கொடார்குருசொன்னபடி
நில்லாரறத்தைநினையார்நின்னாமநினைவிறசற்று
மில்லாரிருந்தென்னிறந்தென்புகல் கச்சியேகம்பனே. (௨௫)

வானமுதத்தின்சுவையறியாதவர்வண்கனியின்
றூனமுதத்தின்சுவையெண்ணம்போலத்தனித்தனியே
தேனமுதத்தின்றெளிவாயஞானஞ்சிறிதுமில்லார்க்
கூனமுதச்சுவைநன்றல்லவோ கச்சியேகம்பனே. (௨௬)

ஊற்றைச்சரீரத்தையாபாசக்கொட்டிலையூன்பொதிந்த
பீற்றற்றுருத்தியைச்சோறிடுந்தோற்பையைப்பேசரிய
காற்றிற்பொதிந்தநிலையற்றபாண்டத்தைக்காதல்செய்தே
யேற்றுத்திரிந்துவிட்டேனிறைவா கச்சியேகம்பனே. (௨௭)

சொல்லால்வருங்குற்றஞ்சிந்தனையால்வருந்தோடஞ்செய்த
பொல்லாததீவினைபார்வையிற்பாவங்கள்புண்ணியநூ
லல்லாதகேள்வியைக்கேட்டிடுந்தீங்குகளாயவுமற்
றெல்லாப்பிழையும்பொறுத்தருள்வாய் கச்சியேகம்பனே. (௨௮)

முட்டற்றமஞ்சளையெண்ணெயிற்கூட்டிமுகமினுக்கி
மெட்டிட்டுப்பொட்டிட்டுப்பித்தளையோலைவிளக்கியிட்டுப்
பட்டப்பகலில்வெளிமயக்கேசெயும்பாவையர்மே
லிட்டத்தைநீதவிர்ப்பாயிறைவா கச்சியேகம்பனே. (௨௯)

பிறந்துமண்மீதிற்பிணியேகுடிகொண்டுபேரின்பத்தை
மறந்துசிற்றின்பத்தின்மேன்மயலாகிப்புன்மாதருக்குட்
பறந்துழன்றேதடுமாறிப்பொன்றேடியபாவையர்க்கீந்
திறந்திடவோபணித்தாயிறைவாகச்சியேகம்பனே. (௩0)

பூதங்களற்றுப்பொறியற்றுச்சாரம் புலன்களற்றுப்
பேதங்குணமற்றுப்பேராசைதானற்றுப்பின்முனற்றுக்
காதங்காரணங்களுமற்றவானந்தக்காட்சியிலே
யேதங்களைந்திருப்பேனிறைவாகச்சியேகம்பனே. (௩க

நல்லாயெனக்குமனுவொன்றுதந்தருண்ஞானமிலாப்
பொல்லாவெனைக்கொன்றுபோடும்பொழுதியல்பூசைசெயஞ்

சொல்லார்நற்கோயினியமம்பலவகைத்தோத்திரமு
மெல்லாமுடிந்தபின்சொல்லுகண்டாய்கச்சியேகம்பனே. (௩௨)

சட்கடத்துக்கிரைதேடிப்பலவுயிர்தன்னைக்கொன்று
விடக்கடித்துக்கொண்டிறுமாந்திருந்துமிகமெலிந்து
படக்கடித்தின்றுழல்வார்கடமைக்காமபற்றிநம
னிடக்கடிக்கும்பொழுதேதுசெய்வார்கச்சியேகம்பனே. (௩௩)

நாறுமுடலைநரிப்பொதிசோற்றினைநான்றினமுஞ்
சோறுங்கறியுநிரப்பியபாண்டத்தைத்தோகையர்தங்
கூறுமலமுமிரத்தமுஞ்சேருங்குழியில்விழா
தேறும்படியருள்வாயிறைவாகச்சியேகம்பனே. (௩௪)

சொக்கிட்டரமனைப்புக்குட்டிருடியதுட்டர்வந்து
இக்குற்றமன்னரைக்கேட்பதுபோற்சிவநிந்தைசெய்து
மிக்குக்குருலிங்கசங்கமநி[illegible]
மெக்குப்பெருத்தவர்க்கென்சொல்லுவேன்கச்சியேகம்பனே. (௩௫)

விருந்தாகவந்தவர்தங்களுக்கன்னமிகக்கொடுக்கப்
பொருந்தார்வளமபெறவாழ்வார்நின்னாமத்தைப்போற்றிநித்த
மருந்தாமுலைப்பங்கரொன்றுதபாதகராமபுவியி
லிருந்தாவதேதுகண்டாயிறைவாகச்சியேகம்பனே. (௩௬)

எல்லாமறிந்துபடித்தேயிருந்தெமக்குள்ளபடி
வல்லானறிந்துளனென்றுணராதுமதிமயங்கிச்
சொல்லான்மலைந்துறுசூழ்விதியின்படிதுக்கித்துப்பி
னெல்லாஞ்சிவன்செயலேயென்பர்காண்கச்சியேகம்பனே. (௩௭)

பொன்னைநினைந்துவெகுவாகத்தேடுவர்பூவைடன்று
டன்னைநினைந்துவெகுவாயுருகுவர்தாரணியி
லுன்னைநினைந்திங்குனைப்பூசியாதவுலுத்தரொல்லா
மென்னையிருந்துகண்டாயிறைவாகச்சியேகம்பனே. (௩௮)

கடுஞ்சொல்லின்வம்பரையீனரைக்குண்டரைககாமுகரைக்
கொடும்பவமேசெயுநிர்மூடர்தம்மைககுவலயத்து
னெடும்பனைபோலவளர்ந்துநல்லோர்தநெறியறியா
விடும்பரையேன்வகுத்தாயிறைவாகச்சியேகம்பனே. (௩௯)

கொன்றேனனேகமுயிரையெல்லாம்பின்புகொன்றுகொன்று
தின்றேனதன்றியுநீங்குசெய்தேனதுதீர்கவென்றே
நின்றேனின்சன்னிதிக்கேயதனாற்குற்றநீபொறுப்பா
யென்றேயுனைநம்பினேனிறைவாகச்சியேகம்பனே. (௪௰)

அன்னையெத்தனையெத்தனையன்னையோ வப்பனெத்தனையெத்தனையப்பனோ, பின்னையெத்தனையெத்தனைபெண்டிரோ பிள்ளையெத்தனையெத்தனை பிள்ளையோ, முன்னையெத்தனையெத்தனைசென்மமோ மூடனாயடியேனுமறிந்திலே, னின்னமெத்தனையெத்தனைசென்மமோ வென்செய்வேன்கச்சியேகம்பநாதனே. (க)

## தி ரு த் தி ல் லை.

காம்பிணங்கும்பணைத்தோளார்க்கும் பொன்னுக்குங்காசினிக்குந்
தாம்பிணங்கும்பலவாசையும்விட்டுத்தனித்துச்செத்துப்
போம்பிணந்தன்னைத்திரளாகக்கூடிப்புரண்டினிமேற்
சாம்பிணங்கத்துதையோவென்செய்வேன்றில்லைச்சங்கரனே. (க)

சோறிடுநாடுதுணிதருங்குப்பைதொண்டன்பரைக்கண்
டேறிடுங்கைகளிறங்கிடுந்தீவினையெப்பொழுது
நீறிடுமேனியர்சிற்றம்பலவர்நிருத்தங்கண்டா
லூறிடுங்கண்களுருகிடுநெஞ்சமென்னுள்ளமுமே. (உ)

அழலுக்குள்வெண்ணெயெனவேயுருகிப்பொன்னம்பலத்தார்
நிழலுக்குணின்றுதவமுஞற்றாமனிட்டூரமின்னார்
குழலுக்கிசைந்தவகைமாலைகொண்டுகுற்றேவல்செய்து
விழலுக்குமுத்துலையிட்டிறைத்தேனென்விதிவசமே. (ங)

ஓடாமற்பாழுக்குழையாமலோரமுரைப்பவர்பாற்
கூடாமனல்லவர்கூட்டம்விடாமல்வெங்கோபநெஞ்சி
னாடாமனன்மைவழுவாமலின்றைக்குநாளைக்கென்று
தேடாமற்செல்வந்தருவாய்சிதம்பரதேசிகனே. (ச)

பாராமலேற்பவர்க்கில்லையென்னாமற்பழுதுசொல்லி
வாராமற்பாவங்கள்வந்தணுகாமன்மனமயர்ந்து
போராமற்சேவைபிரியாமலன்புபெறுந்தவத்தைச்
சேராமற்செல்வந்தருவாய்சிதம்பரதேசிகனே. (ரு)

கொல்லாமற்கொன்றதைத்தின்னாமற்குத்திரங்கோள்களவு
கல்லாமற்கைதவரோடிணங்காமற்கனவினும்பொய்
சொல்லாமற்சொற்களைக்கேளாமற்றோகையர்மாயையிலே
செல்லாமற்செல்வந்தருவாய்சிதம்பரதேசிகனே. (சா)

முடிசார்ந்தமன்னருமற்றுமுள்ளோருமுடிவிலொரு
பிடிசாம்பலாய்வெந்துமண்ணாவதுங்கண்டும்பின்னுமிந்தப்
படிசார்ந்தவாழ்வைநினைப்பதலாற்பொன்னினம்பலவ
ரடிசார்ந்துநாமுய்யவேண்டுமென்றேயறிவாரில்லையே. (எ)

காலையுபாதிமலஞ்சலமாமன்றிக்கட்பசியிற்
சாலவுபாதிபசிதாகமாகுறாக்கஞ்சிதமா

மாலையுபாதிதுயில்காமமாமிவைமாற்றிவிட்டே
யால்முகந்தருளம்பலவாவென்னையாண்டருளே. (௮)

ஆயும்புகழ்த்தில்லையம்பலவாணராருகிற்சென்றாற்
பாயுமிடபங்கடிக்குமரவம்பின்பற்றிச்சென்றாற்
பேயுங்கணமும்பெருந்தலைப்பூதமும்பின்றொடரும்
போயென்செய்வாய்மனமேபிணக்காடவர்போமிடமே. (௯)

ஓடுமெடுத்ததளாடையுஞ்சுற்றியுலாவிமெள்ள
வீடுகடோறும்பலிவாங்கியேவிதியற்றவர்போ
லாடுமருட்கொண்டிங்கம்பலத்தேநிற்குமாண்டிதன்னைத்
தேடுங்கணக்கென்னகாண்சிவகாமசவுந்தரியே. (௧௦)

ஊட்டுவிப்பானுமுறக்குவிப்பானுமிங்கொன்றொடொன்றை
மூட்டுவிப்பானுமுயங்குவிப்பானுமுயன்றவினை
காட்டுவிப்பானுமிருவினைப்பாசக்கயிற்றின்வழி
யாட்டுவிப்பானுமொருவனுண்டேதில்லையம்பலத்தே. (௧௧)

அடியார்க்கெளியவரம்பலவாணரடிபணிந்தான்
மடியாமற்செல்வவரம்பெறலாம்வையமேழளந்த
நெடியோனும்வேதனுங்காணாதரித்தநிமலனருட்
குடிகாணுநாங்களவர்காணுமெங்கள்குலதெய்வமே. (௧௨)

தெய்வச்சிதம்பரதேவாவுன்சித்தந்திரும்பிவிட்டாற்
பொய்வைத்தசொப்பனமாமன்னர்வாழ்வும்புவியுமெங்கே
மெய்வைத்தசெல்வமெங்கேமண்டலீகர்தம்மேடையெங்கே
கைவைத்தநாடகசாலையெங்கேயிதுகண்மயக்கே. (௧௩)

உடுப்பானும்பாலன்னமுண்பானுமுய்வித்தொருவர்தம்மைக்
கெடுப்பானுமேதென்றுகேள்விசெய்வானுங்கெதியடங்கக்
கொடுப்பானுந்தேகியென்றேற்பானுமேற்கக்கொடாமனின்று
தடுப்பானுநீயல்லையோதில்லையானந்ததாண்டவனே. (௧௪)

வித்தாரம்பேசினுஞ்சேர்க்கேறினுங்கம்பமீதிருந்து
தத்தாவென்றோதிப்பவுரிகொண்டாடினுந்தம்முன்றம்பி
யொத்தாசைபேசினுமாவதுண்டோதில்லையுண்ணிறைந்த
சித்தாவின்சொற்படியல்லாதுவேறில்லைகன்மங்களே. (௧௫)

பிறவாதிருக்கவரந்தரல்வேண்டும்பிறந்துவிட்டா
லிறவாதிருக்கமருந்துண்டுகாணிதுவெப்படியோ
அறமார்புகழ்த்தில்லையம்பலவாணரடிக்கமல
மறவாதிருமனமேயதுகாணன்மருந்துனக்கே. (௧௬)

தவியாதிருநெஞ்சமேதில்லைமேவியசங்கரனைப்
புவியார்ந்திருக்கின்றஞானகரனைப்புராந்தகனை

பயியாவிளக்கையென்னம்பலத்தாடியைப்பணியக்கெழுத்தாற்
செவியாமணிசெவித்தாற்பிறவாமுத்திசித்திக்குமே. (கஎ)

காவினமறைப்பொருளம்பலவாணனைநம்பியவர்
பாலிலொருதரஞ்சேவிக்கொணுதிருப்பார்க்கருங்கல்
மேலிலெடுத்தவர்கைவிலங்கைத்தைப்பர்மீண்டுமொரு
காலிணிறுத்துவர்கிட்டியுந்தாம்வந்துகட்டுவரோ. (கஅ)

ஆற்றோடுதும்பையணிநதாடுமம்பலவாணர்தமைப்
போற்றாதவர்க்கடையாளமுண்டேயிந்தப்பூதலத்திற்
சோறற்றுவிம்மற்றுச்சுகமற்றுச்சுற்றத்துத்துணியுமற்றே
யேற்றாலுமபிச்சைகிடையாமலேக்கற்றிருப்பார்களே. (க௯)

ஆத்தனைமுப்பத்துமுக்கோடிதேவர்க்கதிபதியை
யித்தனையம்மைசிவகாமசுந்தரிநேசனையெங்
கத்தனைப்பொன்னம்பலத்தாடுமையனைக்காணக்கண்க
ளெத்தனைகோடியுகமோதவஞ்செய்திருக்கின்றவே. (உ0)

## திருச்செங்காடு.

நெருப்பானமேனியர்செங்காட்டிலாத்திநிழலருகே
யிருப்பார்திருவுளமெப்படியோவின்னமென்னையன்னைக்
கருப்பாசயக்குழிக்கேதள்ளுமோகண்ணன்காணரிய
திருப்பாதமேதருமோதெரியாதுசிவனசெயலே. (க)

## திருவொற்றியூர்.

ஐயுந்தொடர்ந்துவிழியுஞ்செருகியறிவழிந்து
மெய்யும்பொய்யாகிவிடுகின்றபோதொன்று வேண்டுவன்யான்
செய்யுந்திருவொற்றியூருடையீர்திருநீறுமிட்டுக்
கையுந்தொழப்பண்ணியைந்தெழுத்தோதவுங்கற்பியுமே. (க)

சுடப்படுவாரறியார்புரமூன்றையுஞ்சுட்டபிரான்
றிடப்படுமாமதிற்றென்னொற்றியூரன்றெருப்பரப்பி
[illegible]டப்பவர்பொற்பதந்தலைமேற்படநன்குருண்டு
கிடப்பதுகாண்மனமேவிதியேட்டைக்கிழிப்பதுவே. (உ)

## திருவிடைமருதூர்.

காடேதிரிந்தென்னகா[illegible]சுற்றி
யோடேயெடுத்தென்னவுள்ளன்பிலாதவரோங்குவிண்ணோர்
நாடேயிடைமருதீசர்க்குமெய்யன்பர்நாரியர்பால்
வீடேயிருப்பினுமெய்ஞ்ஞானவீட்டின்பமேவுவரே. (க)

தாயும்பகைகொண்டபெண்டிர்பெரும்பகைதன்னுடைய
சேயும்பகையுறவோரும்பகையிச்செகமும்பகை
யாயும்பொழுதிலருஞ்செல்வநீங்கிலிங்காதலினாற்
றோயுநெஞ்சேமருதீசர்பொற்பாதஞ்சுதந்திரமே. (உ)

திருக்கழுக்குன்றம்.

காடோசெடியோகடற்புறமோகனமேமிகுந்த
நாடோநகரோநகர்நடுவோநலமேமிகுந்த
வீடோபுறந்திண்ணையோதமியேனுடல்வீழுமிட
நீடோய்கழுக்குன்றிலீசாவுயிர்த்துணைநின்பதமே! .(௧)

திருக்காளத்தி.

மத்தும்புகுந்துபிறந்துவளர்ந்துபட்டாடைசுற்றி
முத்தும்பவளமும்பூண்டோடியாடிமுடிந்தபின்பு
செத்துக்கிடக்கும்பிணத்தருகேயினிச்சாம்பிணங்கள்
கத்துங்கணக்கென்னகாண்கயிலாபுரிக்காளத்தியே. (௧)

பொன்னாற்பிரயோசனம் பொன்படைத்தாற்குண்டு பொன்படைத்தோ
றன்னாற்பிரயோசனம்பொன்னுக்கங்கேதுண்டத்தன்மையைப்போ [ன்
லுன்னாற்பிரயோசனம்வேணதெல்லாமுண்டுனைப்பணியு
மென்னாற்பிரயோசனமே துண்டுகாளத்தியீசுரனே. (௨)

வாளான்மகவரிந்தூட்டவல்லேனல்லன்மாதுசொன்ன
சூளாலிளமைதுறக்கவல்லேனல்லன்றொண்டுசெய்து
நாளாறிற்கண்ணிடந்தப்பவல்லேனலனானினிச்சென்
றாளாவதெப்படியோதிருக்காளத்தியப்பருக்கே. (௩)

முப்போதுமன்னம்புசிக்கவுந்தூங்கவுமோகத்தினாற்
செப்போதிளமுலையாருடன்சேரவுஞ்சீவன்விடு
மப்போதுகண்கலக்கப்படவும்மமைத்தாயையனே
யெப்போதுகாணவலலேன்றிருக்காளத்தியீசுரனே. (௪)

இரைக்கேயிரவும்பகலுந்திரிந்திங்கிளைத்துமின்னா
ரரைக்கேயலைக்குழியருகேயசுமபார்நதொழுகும்
புரைக்கேயுழலுந்தமியேனையாண்டருள்பொன்முகலிக்
கரைக்கேகலலாலநிழற்கீழமர்ந்தருள்காளத்தியே. (௫)

நாறுங்குருதிச்சலதாரைதோம்புரைநாடொறுஞ்சீ
யூறுமலககுழிகாமத்துவாரமொளிததிடும்புன்
டேறுந்தசைப்பிளப்பந்தரங்கத்துட்சிற்றின்பம்விட்
டேறும்பதந்தருவாய்திருக்காளத்தியீசுரனே. (௬)

கைலாயம்.

நான்சாயும்வெள்ளியலைக்கரசேநின்கழனம்பினே
னூன்சாயுஞ்சென்மமொழித்திடுவாய்காலூரனுக்காய்
மான்சாயச்செங்கைமழுவலஞ்சாயவனைநதகொன்றைத்
தேன்சாயநல்லதிருமேனிசாய்த்தசிவக்கொழுந்தே. (௧)

ஒழு

இல்லந்துறந்துபசிவந்தபோதங்கிரந்துநின்று
பல்லுங்கறையற்றுவெள்வாயுமாயொன்றிற்பற்றுமின்றிச்
சொல்லும்பொருளுமிழந்துசுகானந்தத்தூக்கத்திலே
யல்லும்பகலுமிருப்பதென்றோகைலாயத்தனே (௨)

சிலந்தனையற்றுப்பிரியமுந்தானற்றுச்செயலையற்று
நினைந்ததுமற்றுநினையாமையுமற்று நிர்ச்சிந்தனாய்த்
தனந்தனியேயிருந்தானந்தநித்திரைதங்குகின்ற
வனந்தலிலென்றிருப்பேனத்தனேகைலாயத்தனே. (௩)

கையாரவேற்றுநின்றங்கனந்தின்றுகரித்துணியை
தையாதுடுத்துநின்சன்னிதிக்கேவந்துசந்ததமு
மெய்யாரநிற்பணிந்துள்ளேயுரோமம்விதிர்விதிர்ப்ப
வையாவென்றோலமிடுவதென்றோகைலாயத்தனே (௪)

நீரூர்த்தமேனியுரோமஞ்சிலிர்த்துளநெக்குநெக்குச்
சேறாய்க்கசிந்துகசிந்தேயுருகிநின்சீரடிக்கே
மாறாத்தியானமுற்றானந்தமேற்கொண்டுமார்பிற்கண்ணீ
ராறாய்ப்பெருகக்கிடப்பதென்றோகைலாயத்தனே. (௫)

செல்வரைப்பின்சென்றுசங்கடம்பேசித்தினந்தினமும்
பல்லினைக்காட்டிப்பரிதவியாமற்பரானந்தத்தி
னெல்லையிற்புக்கிடவேகாந்தமாயெனக்காமிடத்தே
யல்லலற்றென்றிருப்பேனத்தனேகைலாயத்தனே. (௬)

மந்திக்குருளையொத்தேனில்லைநாயேன்வழக்கறிந்துஞ்
சிந்திக்குஞ்சிந்தையையானனசெய்வெனனைத்தீதகற்றிப்
புந்திப்பரிவிற்குருளையையேந்தியபூசையைப்போ
லெந்தைக்குரியவன்காணத்தனேகைலாயத்தனே. (௭)

வருந்தேன்பிறந்துமிறந்துமயக்கும்புலன்வழிபோய்ப்
பொருந்தேனரகிற்புகுகின்றிலேன்புகழ்வாரிடத்தி
லிருந்தேனினியவர்கூட்டமவிடேனியலஞ்செழுத்தா
மருந்தேனருந்துவனின்னருளாற்கைலாயத்தனே. (௮)

மதுரை.

விடப்படுமோவிப்பிரபஞ்சவாழ்க்கையைவிட்டுமனந்
திடப்படுமோநின்னருளின்றியேதினமேயலையக்
கடப்படுமோவம்பர்வாயிலிற்சென்றுகண்ணீர்ததும்பிப்
படப்படுமோசொக்கநாதாசௌந்தரபாண்டியனே. (௧)

பொது.

உடைகோவணமுண்டுறங்கப்புறந்திண்ணையுண்டுணவிங்
கடைகாயிலையுண்டருந்தத்தண்ணீருமுண்டருந்துணைக்கே

விடையேறு மீசர்திருநாமமுண்டிந்தமேதினியில்
வடகோடுயர்ந்தென்னதென்கோடுசாய்ந்தென்னவான்பிறைக்கே. (௧)
வீடுநமக்குத்திருவாலங்காடுவிமலர்தந்த
வோடுநமக்குண்டுவற்றாதபாத்திரமோங்குசெல்வ
நாடுநமக்குண்டுகேட்டதெல்லாந்தரநன்னெஞ்சமே
யீடுநமக்குச்சொலவேயொருவருமிங்கில்லையே. (௨)
நாடிக்கொண்டீசனைநாட்டமுற்றுயிலைநாதரடி
தேடிக்கொண்டாடித்தெளிந்தாயிலைசெகமாயைவந்து
மூடிக்கொண்டோமென்றுங்காமாயுதங்கண்முனிந்தவென்றும்
பீடிப்பையோநெஞ்சமேயுனைப்போலில்லைப்பித்தர்களே. (௩)
கையொன்றுசெய்யவிழியொன்றுநாடக் கருத்தொன்றெண்ணப்
பொய்யொன்றுவஞ்சகநாவொன்றுபேசப்புலால்கமழு
மெய்யொன்றுசாரச்செவியொன்றுகேட்கவிரும்புமியான்
செய்கின்றபூசையெவ்வாறுகொள்வாய்வினைதீர்த்தவனே. (௪)
கண்ணுண்டுகாணக்கருத்துண்டுநோக்கக்கசிந்துருகிப்
பண்ணுண்டுபாடச்செவியுண்டுகேட்கப்பல்பச்சிலையா
லெண்ணுண்டுசாத்தவெதிர்நிற்கவீசனிருக்கையிலே
மண்ணுண்டுபோகுதையோகெடுவீரிந்தமானிடமே. (௫)
சால்லிலுஞ்சொல்லின்முடிவிலும்வேதச்சுருதியிலு
ல்லிலுமாசற்றவாகாயந்தன்னிலுமாய்ந்துவிட்டோ
ரில்லிலுமன்பரிடத்திலுமீசனிருக்குமிடங்
கல்லிலுஞ்செம்பிலுமோவிருப்பானெங்கள்கண்ணுதலே. (௬)
வினைப்போகமேயொருதேகங்கண்டாய்வினைதானொழிந்தாற்
றினைப்போதளவுநில்லாதுகண்டாய்சிவன்பாதநினை
நினைப்போரைமேவுநினையாரைநீங்கநெறியினின்று
னைப்போலொருவருண்டோமனமேயெனக்குற்றவரே. (௭)
பட்டைக்கிழித்துப்பருவூசிதன்னைப்பரிந்தெடுத்து
முட்டச்சுருட்டியென்மொய்குழலாள்கையின்முன்கொடுத்துக்
கட்டியிருந்தகனமாயக்காரிதனகாமமெல்லாம்
விட்டுப்பிரியவென்றோவிங்ஙனேசிவன்மீண்டதுவே. (௮)
கூதற்றகொய்கையுமாணர்கலவியுஞ்சூழ்பொருளும் •
போதற்றபூசலுக்கென்செயலாஞ்செய்தபுண்ணியத்தாற்
றீதற்றமன்னவன்சிந்தையினின்றுதெளிவதற்கோ
காதற்றவூசியைத்தந்துவிட்டானென்றன்கைதனிலே. (௯)
வாதுற்றதிண்புயரண்ணாமலையர்மலர்ப்பதத்தைப்
போதும்பெற்றெப்போதும்புகலுநெஞ்சேயிந்தப்பூதலத்திற்

